# பிலிப்ஸ் ஃப்ளுரோஸென்ட் லாம்புகளில் ஓரங்கள் கறுப்பதைத் தடுப்பது எது?

ஃப்ளுரோஸென்ட் லாம்புகளில் ஓரங்கள் கறுத்துவிட்டால் ஒளித்திறன் குறைந்து பார்ப்பதற்குக் கவர்ச்சி யற்றதாகத் தோற்ற மளிக்கும். காரணம்? எமிட்டர் பேஸ்ட் கணங்கள். இவை லாம்ப் பொருத்திய வுடன் தெறித்துக் குழலின் மேற் புறத்தில் படிந்து விடுகின்றன. ஆனால் பிலிப்ஸ் லாம்புகளில் இது ஏற்படுவதில்லை. அதுவே தெறிக்கும் எமிட்டர் கணங்களைப் பிடிக்கும் சாதனம் இருப்பதின் விசேடம். இது எலெக்ட்ரோடு களைச் சுற்றியுள்ள ஒரு வளையமாகும். எமிட்டர் பேஸ்ட் கணங்கள் தெறிக்கும் போது அவை லாம்பின் மீது படி வதைத் தடுத்து விடுகிறது. அதனால் ஓரங்கள் கறுப்பது தடுக்கப்பட்டு ஒளிக் கதிர்களின் திறன் மிகச்சீரான நிலையில் இருக்கின்றன. இது தான் மற்ற எந்த ஃப்ளுரோஸென்ட் லாம்பிலும் இல்லாத ஒரு விசேட அமைப்பு.

## எலெக்ட்ரோடுகளைச் சுற்றியுள்ள ஆனோட்ரிங்.






பிலிப்ஸ் ஃப்ளுரோஸென்ட் லாம்புகளைப் பற்றி மேலும் அறிந்து கொள்வது லாபமளிக்கிறது.

# பிலிப்ஸ்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்



# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே.

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம். பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு— ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நாளைய மிக்க மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேருதவி**

*Johnson & Johnson**





# கல்கி

## இந்த இதழில் ...


ஆனந்த ஆடி 5 ○ ஜூலை 21, 1974


**பாதிக் கிணறு தாண்டினார்கள்!**

பண வீக்கத்தைக் கட்டுப்படுத்த அரசாங்கம் மேற்கொண்ட நடவடிக்கைகள் இந்த விதமாய்த்தான் உள்ளன!

**கிரிக்கெட் படுதோல்வி எதனால்?**

இங்கிலாந்தில் அடைந்த தோல்விகளை அலசி ஆராய்கிறது கட்டுரை.

**பொடி போடுவோர் பாதுகாப்புப் படை!**

இதற்கு மட்டுமென்ன, இனி பாதுகாப்புப்படை எதற்கு வேண்டுமானாலும் திரளும்!

**அவனுக்குக் கிடைத்தது:
அவளுக்குக் கிடைக்கவில்லை!**

பதவி உயர்வு அவனுக்குக் கிடைத்தது; ஆனால் அவள் எதிர்பார்த்த மற்றொன்று....? நெஞ்சைத் தொடும் நயமான கதை.

**ஆண் குலமே அழு!**

அமெரிக்காவில் இப்போதெல்லாம் மகளிர் விடுதலை இயக்கம் படுத்து விட்டது. ஆடவர் விடுதலை இயக்கம் தான் சூடு பிடித்திருக்கிறது!

**மலர்க் கோப்பையில்
அலர்ந்த பூக்கள்:
மனக் கோப்பையில்
மலரும் நினைவுகள்!**

மேலட்டை வண்ணப்படம்: தனசேகரன்

---

"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்



மலர் 33 -- இதழ் 51

# பாதிக் கிணறு தாண்டினார்கள்!

நாட்டு நலனில் அக்கறை கொண்ட அறிஞர்கள் பண வீக்கம் பற்றி எச்சரித்தபோதெல்லாம், 'வளர்ச்சியுற்று வரும் பொருளாதாரத்தில் பண வீக்கம் இன்றியமையாத அம்சம்' என்று அதிகார ஆணவத்துடன் பேசியது மத்திய அரசு. இன்று அதுவே பண வீக்கத்தையும் அதன் உடன் விளைவான விலைவாசி உயர்வையும் கண்டு கதிகலங்கிப் போய் இருக்கிறது!

இப்படிப் பயந்ததும் பரிகாரமாக நடவடிக்கை எடுத்ததும் மேலும் சில அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்படும் என்று சொன்னதும் சரி. நிலைமையைச் சீராக்க அரசாங்கத்தினால் ஒன்றுமே செய்ய முடியாதோ என்ற மக்களின் கவலை குறைந்து நம்பிக்கை பிறக்க வழி ஏற்பட்டிருக்கிறது.

ஆனால் இவையெல்லாம் பாதிக் கிணறு தாண்டிய கதைதான். முழுக் கிணறும் தாண்டுமுன்னர் பொருளாதாரச் சீர் குலைவு என்ற பாழுங்கிணற்றில் தேசத்தை அரசு இழுத்து விட்டு விடாதிருக்க வேண்டும்! — இனி வரவிருக்கும் சட்டங்களுக்கு இப்போது பிறப்பிக்கப்பட்டுள்ள சட்டத்தை ஒரு முன் மாதிரியாகக் கொள்ளலாம் என்றால் இந்தவிதமான முடிவுக்கே வர வேண்டியுள்ளது.

அவசரச் சட்டத்தால் விலைவாசி குறையுமா என்றால் குறையாது என்ற பதில்தான் கிடைக்கும். இன்றுள்ள பண வீக்கமாவது மட்டுப்படுமா என்றால் அதுவுமில்லை. இனி **எதிர்காலத்தில்** தரப்படவிருக்கும் ஊதிய உயர்வு, பஞ்சப்படி, டிவிடெண்ட் ஆகியவற்றின் **ஒரு பகுதியை மட்டுமே** ரிஸர்வ் பாங்கில் முடக்கப் போவதால் இப்போது நிலவுகிற பணவீக்கம் குறைந்து விடப் போவதில்லை. ஓரளவுக்கு அதிகமாகவே போகிறது.

வலது கையிலிருந்து இடது கைக்கு மாற்றுகிற கதையாக மக்களிடம் தரப்பட வேண்டிய பணத்தின் ஒரு பகுதியை ரிஸர்வ் பாங்கில் ஓரிரு வருடங்களுக்கு முடக்கி வைக்கப் போகிறார்கள்! முதலீட்டுக்கு உதவாமல், உற்பத்திப் பெருக்கத்துக்குத் துணை செய்யாமல் சும்மா முடங்கிக் கிடக்கப் போகும் இந்தப் பணத்துக்குப் பதினொரு சதவீதம் வட்டி தருவார்களாம்! யார் தருவார்கள் வட்டியை? மக்களின் வரிப் பணம்தான் இதற்குப் பயனாகும்.

இந்த அவசரச் சட்டத்தால் ஏராளமான சிறிய பங்குதாரர்களும் மாதச் சம்பளம் வாங்கும் நடுத்தர வர்க்கத்தினரும் தொழிலாளர்களும் மிகவும் அதிருப்தி அடைந்துள்ளார்கள். இந்த அதிருப்தி அவர்களது வேலைத் திறனைப் பாதிக்கும். உற்பத்தி குறையும்.

அபரிமிதமான வரிக் கொள்கை கறுப்புப்பணப் பொருளாதாரம் செழிப்படையவும் வெளுப்புப் பணப் பொருளாதாரம் சீரழியவும் வழி வகுத்திருக்கிறது. கறுப்புப் பணத்தைக் கட்டுப்படுத்த எந்த நடவடிக்கையையும் இது வரை அரசு மேற்கொள்ளக் காணோம்!

பொருளாதார வளர்ச்சிக்குத் தொழில் துறையிலும் விவசாயத் துறையிலும் முதலீட்டுப் பெருக்கம், வேலை வாய்ப்புப் பெருக்கம், உற்பத்திப் பெருக்கம் ஆகியவை நடைபெற வேண்டும். இதற்கு ஊக்கமளிக்கும் விதமாக அரசின் பொருளாதாரக் கொள்கை அமையட்டும். அரசின் பணி ஆள்வதே. கட்டுப்பாடுகளை நீக்கி உற்பத்தி, விநியோக வர்த்தகம் ஆகியவற்றை மக்களிடமே நம்பி ஒப்படைத்துப் போட்டா போட்டியை அரசு உருவாக்கட்டும்.

தொழில் துறைக்கும் விவசாயத்துக்கும் இன்றியமையாத மின் உற்பத்தி, நீர்ப்பாசன வசதி, உர உற்பத்தி, போக்குவரத்து அபிவிருத்தி போன்ற சில அம்சங்களை அரசு கவனித்தால் போதும்.

உற்பத்திக்கு உதவாத அரசாங்கத்தின் ஊதாரிச் செலவினங்கள், துரித காலத்தில் லாபம் காண முடியாத ராட்சச ஆலைகள், தேசிய மய மோகம் ஆகிய சோஷலிச சித்தாந்த பொருளாதாரக் கொள்கைகளுக்கு முழுக்குப் போட வேண்டிய காலம் வந்துவிட்டது.

பண வீக்க அரக்கனுடன் அரசு போராட விரும்பினால் மக்கள் ஒத்துழைக்கத் தயாராகவே உள்ளார்கள். ஆனால் எடுக்கும் நடவடிக்கை பயன் தருவதாய் இருக்கட்டும். பிளாட்பாரம் டிக்கட் வாங்கிக் கொண்டு ரயிலேற முயல வேண்டாம்!


எம்.ஜி.ஆர் படம்
மௌன ஆசிரம
திரைக்குப் பின்னால்


கேள்விக் குறி!

# சுயாட்சி விஷமிகளின் துவேஷப் பிரசாரம்!

நாலு ஸினிமாக் தியேட்டர்களைக் கொளுத்தி விட்டால் பாலும் தேனும் தமிழ் நாட்டில் பெருக்கெடுத்து ஓடும் என்று சில அதி புத்திசாலிகள் எண்ணுகிறார்கள்.

யார் மீது பழி தீர்த்துக் கொள்ள இவர்கள் நினைக்கிறார்களோ அவர் மீது அநுதாபம் இதனால் மக்களுக்கு மலையளவு பெருகுவதை இந்த மேதாவிகள் புரிந்து கொள்ளவில்லை.

தமிழர்களுக்குத் தலைகுனிவை ஏற்படுத்தியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் இந்தப் படை தமிழகத்தைப் பற்றியுள்ள பீடை.

இவர்களது அற்பத்தனம் ஒருபுறமிருக்க, சென்னையில் தடபுடலாகக் கூடிய தி.மு.க. பொதுக் குழு மேற்படி படையினர் பரப்ப முயலும் துவேஷத்துக்கு எண்ணெய் வார்க்கிற கதையாக ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. தமிழ் நாட்டில் எண்பது சதவீதம் வேலை வாய்ப்புக்களை இங்குள்ள மக்களே பெற வழி வகுக்க வேண்டும் என்று தீர்மானம் கூறுகிறது.

இதைவிடத் தமிழர்களுக்கு இழுக்குத் தேடித் தரக்கூடிய விஷயம் வேறு இல்லை.

''இப்போதேகூடத் தமிழ் நாட்டில் எண்பது சதவீதம் வேலை வாய்ப்புக்களைத் தமிழர்கள்தான் பெற்றுள்ளனர் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை'' என்கிறார் திரு க. சந்தானம் சுயராஜ்யாவில். ''தமிழர் பார்க்காத வேலைகள் என்று கணக்கெடுத்தால் சில விசேஷத் திறமைகள் தேவைப்படும் காரியமாகவோ அல்லது தமிழர் செய்ய விரும்பாத சாமானியப் பணியாகவோதான் இருக்கும்'' என்கிறார்.

அப்படியானால் இந்தத் தீர்மானத்துக்கு அவசியம் என்ன? துவேஷத்தை வளர்ப்பது தவிர வேறென்ன நோக்கம் இருக்க முடியும்?

தமிழர்கள் இந்தியப் பிரஜைகள். அவர்களுக்கு நாடு முழுதும் சென்று வேலை தேடும் உரிமை உண்டு. தமிழகத்தைப் பின்பற்றி வேறு பல மாநிலங்களும் இதுபோன்ற தீர்மானங்களும் சட்டங்களும் நிறைவேற்றினால் தமிழன் கதி என்ன? நாட்டின் நிலைதான் என்ன? பாரதத்தின் ஒருமைப்பாட்டைக் குலைக்கப் பார்க்கிறவர்களிடம் தமிழர்கள் ஏமாந்து போகக் கூடாது. சுயாட்சி விஷமிகளின் இந்தத் துவேஷப் பிரசாரத்தைப் பஞ்சாயத்து முதல் பாராளுமன்றம் வரையில் அனைத்துக் கட்டத்திலும் எதிர்க்க வேண்டும்.

# மாதவன் பிடிவாதம் வளரட்டும்!

அயல்நாடுகளுக்குச் சுற்றுப் பயணம் கிளம்புவோர் மகாநாடுகளில் சொற்பொழிவாற்றுவார்கள், ஊர் சுற்றிப் பார்ப்பார்கள், மெடிக்கல் செக்அப் செய்து கொள்வார்கள், சம அந்தஸ்துள்ளவர்களைச் சந்தித்துக் கை குலுக்குவார்கள், — திரும்பி வந்ததும் ஞாபகமாகக் கட்டுரை எழுதத் தொடங்குவார்கள்!

ஆனால் அமைச்சர் திரு மாதவன் தமிழ் நாட்டின் தொழில் வளப் பெருக்கத்துக்கு உதவுபடியாகப் பதினைந்து பதினாறு ஒப்பந்தங்களுடன் திரும்பியிருக்கிறார்! மேனாட்டு நிறுவனங்களின் ஒத்துழைப்புடன் இங்கு கூட்டுத் துறையில் (தனியார் துறையும் அரசுத் துறையும் இணைந்து) உருவாகவிருக்கும் இந்தத் தொழிலகங்களுக்கு மத்திய அரசின் அனுமதி ஏற்கெனவே கிடைத்து விட்டது. ஒப்பந்த நகல்களை அது அங்கீகரிக்க வேண்டியதுதான் பாக்கி.



இத்தொழிலகங்கள் எல்லாம் செயல்படும் போது சுமார் இருபத்தைந்து அல்லது முப்பது கோடி ரூபாய் இவற்றில் முதலீடாகியிருக்கும். தமிழ் நாட்டின் தொழில் வளமும் வேலைவாய்ப்புக்களும் பெருகும்.

இவை தவிர இன்னும் பல புதிய தொழிலகங்களைத் தொடங்க அயல்நாடுகளில் யார் யார் உதவுவார்கள் என்றும் நோட்டம் பார்த்துக் கொண்டு வந்திருக்கிறார் மாதவன்.

தொழிலகங்கள் குறித்த காலத்தில் தோன்றி இயங்கவும் லாபகரமாக நன்கு செயலாற்றவும் மாதவன் இதே அளவு பிடிவாதத்துடனும் விடாமுயற்சியுடனும் இயங்க வாழ்த்துகிறோம்.

# அசைக்கப் பார்க்கிறார் ஷேக் அப்துல்லா!

அந்நிய நாட்டினரின் உதவியுடன் காஷ்மீரை இந்தியாவிலிருந்து துண்டித்து அதைப் பூரண சுதந்திர நாடாக்கும் முயற்சியில் ஈடுபட்டார் என்பதற்காக ஷேக் அப்துல்லா 1953ல் கைது செய்யப்பட்டார்.

அதற்கு முன்பாகக் காஷ்மீர் ஏறத்தாழ ஒரு சுதந்திர நாடாகவே இருந்தது. இந்தியா அதன் அயல் நாட்டு விவகாரம், பாதுகாப்பு, செய்தித் தொடர்பு ஆகிய அம்சங்களை மட்டுமே கவனித்து வந்தது. ஷேக் அப்துல்லா சிறைப்பட்ட பின்னர் பதவி ஏற்ற காஷ்மீர் அரசாங்கத்தின் முழு ஒப்புதலுடன் காஷ்மீர் இந்தியாவின் ஓர் அங்கமாகவே ஆகிவிட்டது. என்றாலும் சில

தனிச் சலுகைகள் அளிக்கப்பட்டன. மற்ற மாநிலத்தவர் அங்கு நிலம் வாங்கக் கூடாது, வேலை வாய்ப்புக்களில் போட்டியிடக் கூடாது என்று இப்படிச் சில.

விடுதலை பெற்ற ஷேக் அப்துல்லா 1953ம் ஆண்டுக்கு முற்பட்ட நிலைக்குத் திரும்பவேண்டும் என்று கூறி வருகிறார். இன்றும் சொல்கிறார், பிடிவாதத்துடன்.

இந்நிலையில் மத்திய அமைச்சர் ஸ்வரண் சிங் அவருடன் குலாவுவது கவலையளிக்கிறது. 'பேச்சு வார்த்தைகள் சுமுகமாக நடந்தன; கருத்தொற்றுமை காணப்பட்டது' என்ற அறிக்கைகள் கவலையை அதிகரிக்கச் செய்கின்றன.

இந்தியாவின் ஓர் அங்கம் என்ற நிலையை மாற்றிப் பழையபடி காஷ்மீருக்குச் சுயாட்சி அந்தஸ்தை அளிப்பது ஆபத்தான தொடர் விளைவுகளை ஏற்படுத்தும். அரசு ராஜ தந்திரத்துடன் செயல்பட்டு, காஷ்மீர மக்களின் விருப்பத்தை நேரடியாக அறிய 1953லேயே தக்க ஏற்பாடுகளைச் செய்திருந்தால் இப்போது இந்தச் சிக்கலுக்கே இடமில்லை. ஆனால் இன்று, இருபதாண்டுகளாக இருந்து வரும் ஒரு நிலையை மாற்றுவது சாணக்கியமாகாது. பாரதம் முழுவதிலுமே கடந்த இருபதாண்டுகளில் அரசியல் போக்கு ரொம்பவும் திசை மாறிப் போயிருக்கிறது என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும்.

பாகிஸ்தான் வசமுள்ள காஷ்மீர் பாகிஸ்தானின் ஓர் அங்கமாகி விட்ட பிறகு அதன் விடுதலைக்கோ சுயாட்சிக்கோ ஏதும் வகை காணாமல் கையைப் பிசையும் ஷேக் அப்துல்லா இந்திய அரசை மட்டும் அசைக்கப் பார்ப்பது விந்தை.

லடாக் பகுதியும் ஜம்முவும் இந்தியாவுடன் மேலும் நெருக்கமான இணைப்பையே விரும்புகின்றன என்பதையும் மறப்பதற்கில்லை.

ஷேக் அப்துல்லாவின் ஆசைக்கு இன்று பாரத அரசு விட்டுக் கொடுத்தால் நாளைக்கு 'தமிழகத்தின் ஷேக் அப்துல்லா' என்று பட்டம் சூட்டிக் கொள்ள இங்கு ஒருவர் தயாராகக் காத்திருக்கிறார்!

எச்சரிக்கிறோம்!

## கலியுக கம்சர்கள்!

குழந்தைகளுக்குப் பாலுணவு கெஞ்சியோ கூத்தாடியோ கொஞ்சம் அதிகப் பணம் கொடுத்தோ பெற்றோர்கள் பெற்றுக்கொண்டிருந்தார்கள். அரசாங்கம் பாலுணவு விநியோகத்தைச் சீர்ப்படுத்துவதாகக் கூறிக்கொண்டு தலையிட்டு 'உள்ளதும் போச்சே நொள்ளைக் கண்ணு' என்ற நிலையை ஏற்படுத்தி விட்டது!

இந்த இதழ் வட்டமேஜைப் பகுதியில் ஒரு தகப்பனார் எழுதியுள்ள கடிதம் கல் மனத்தையும் கரையச் செய்யும்; ஆனால் அரசாங்கத்தின் அசட்டுப் பிடிவாதத்தை அதனால் கூட அசைக்க முடியாது!

பாட்னாவில் பதுக்கப்பட்ட 60,000 பாலுணவு டின்கள் பிடிபட்டன என்ற செய்தி இத்தகைய கலியுக கம்சர்கள் இருக்கிறார்களே என்ற கோபத்தைக் கிளப்பி விடுகிறது. அதற்கும் மேலாக இத்தகைய கள்ளச் சந்தைக்கும் உற்பத்திக் குறைவுக்கும் வழி வகுக்கும் பெர்மிட் லைசென்ஸ் கண்ட்ரோல் ஆட்சி மீது ஆத்திரம் பொங்குகிறது.

## பிராமண சமூகத்துக்கு ஷொட்டு!

"ஏண்டா பிராமணனாகப் பிறந்தோம்?" என்று அங்கலாய்த்துக் கொண்டிருக்கிறார்கள் இன்று பிராமண சமுதாயத்தினர். எங்கும் வேண்டப்படாதவர்களாக விளங்குகின்றனர். சர்க்கார் காரியாலயங்களில் அவர்களுக்கு வேலை கிடைக்காது. மருத்துவ, பொறி இயல் கல்லூரிகளில் இடம் கிடைப்பது குதிரைக்கொம்பாகும். இத்தகைய சூழ்நிலையில் ஓர் ஆறுதல் அளிக்கும் செய்தி வந்துள்ளது. ஹரிஜன வகுப்பார், சர்க்காரில் தங்கள் க்ஷேம நலன்களைப் பாதுகாக்கும் உயர்தர அதிகாரிகளாக பிராமணர்களை நியமிக்கப்பட வேண்டும் என்று கோரியிருக்கின்றனர். இது பிராமணர்களுக்கு ஆறுதல் என்பது மட்டுமல்ல, ஹரிஜனங்கள் தங்களிடம் வைத்துள்ள மதிப்பையும் நம்பிக்கையையும் கண்டு மனம் நெகிழவும் செய்வார்கள்.

ராஜாஜி சிந்தனை

### வாழவிடாமல் வதைக்கிறார்கள்!

பண வீக்கத்தைக் கட்டாயச் சேமிப்பு மூலமாகக் கட்டுப்படுத்திவிடலாம் என்று நிதிமந்திரிக்கு யார் யோசனை சொல்லியிருந்தாலும் சரி, ஏற்கனவே துயரம் அடைந்துள்ள நமது ஜனங்களை மேலும் வதைப்பதாக உள்ள இந்தத் திட்டத்துக்கு நிதிமந்திரியே முழுப் பொறுப்பு ஏற்க வேண்டும்.

இந்திய அரசின் படுதோல்வி அடைந்துள்ள பொருளாதாரக் கொள்கையை மாற்றி வேலை வாய்ப்புப் பெருக்கம், பொருளாதார வளர்ச்சி, ரூபாயின் மதிப்பு உயர்வு ஆகியவற்றை உண்டாக்க வேண்டுமானால் அதற்குப் புதிய புதிய தொழிலகங்களில் முதலீடுகள் அதிகரிக்க வழி செய்ய வேண்டும். எல்லாப் பொருளாதாரக் கொள்கைகளும் இதற்கு அநுசரணையாக அமைய வேண்டும். முதலீடு பெருகுவதே ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியை நிர்ணயிப்பது. இதற்கு ஏற்ற சூழ்நிலையும் போட்டா போட்டி மனப்பான்மையையும் உருவாக்குவதற்குப் பதிலாக யோக்கியமானவர்கள் மனமுடைந்து போகவும் மனச்சாட்சியில் நம்பிக்கை இல்லாதவர்கள் கறுப்புப் பணம் பண்ணவும் ஏற்ற நிலைமையை உண்டாக்குகிறார்கள்!

— சுயராஜ்யா, ஜுன் 15, 1963




‘ஸௌந்தர்ய லஹரி’யின் முதல் சுலோகத்திலேயே அம்பாளுடைய அபார மான சக்தியை ஆசார்யாள் சொல்கிறார். (சிவ: சக்த்யா யுக்தோ). "சக்தியாகிற அம்மா! பரமேசுவரனை சிவனும் உன்னுடன் சேர்ந்திருந்தால்தான் காரியம் செய்வதற்குத் திறமை உள்ளவராவார். உன்னோடு சேர்ந் திராவிட்டால் அவரால் துளி அசைவதற்குக் கூட முடியாது. அதற்கான சாமர்த்தியம், சக்தி அவருக்குக் கிடையாது" என்கிறார். தன்னைத் தவிர வேறு ஏதுமே இல்லாததால், எதையுமே தெரிந்து கொள்ள முடியாமல் இருப்பது பிரம்மம். இருந்தாலும் லோகத் தில் இத்தனை தினுசான அறிவுகள் வந்து விட்டன. பிரம்மம் எங்குமாக எல்லாமாக இருப்பதால் அது அசைவதற்கு இடம் ஏது? ஆனாலும், பிரம்மாண்டம் முழுக்க, உலகம், நக்ஷத்திரங்களிலிருந்து தொடங்கி அணுவுக்குள் இருக்கிற எலெக்ட்ரான் வரையில் எல்லாம் எப்போது பார்த்தா லும் அசைந்து கொண்டேயிருக்கின்றன. நம் மனசோ கேட்கவே வேண்டாம் — எப் போது பார்த்தாலும் அசைவுதான்! இத் தனை அறிவுகளும், அசைவுகளும் எப்படியோ பிரம்மத்தில் வந்துவிட்ட மாதிரி இருக்கின் றன! அதுதான் மாயா காரியம்; அல்லது பிரம்ம சக்தியின் பிரபாவம்! பிரம்மத்தை சிவன் என்றும் அதன் சக்தியை அம்பாள் என்றும் சொல்கிறபோது, இதையே ஆசார் யாள், "அம்மா! நீதான் சிவனையும் ஆட்டி வைக்கிறாய், அசைய வைக்கிறாய்!" என்கிறார். இறுதியில் இல்லாமல் போகிற லோகம் அவ ளால்தான் வந்தது. யா மா — எது இல் லையோ, அதுவே - மாயா. நமக்கு மாயை யைப் போக்குகிறவளும் அவள்தான்.

நாம் பார்க்கிற ரூபமெல்லாம் அவள் செய்ததுதான். இருந்தாலும் விசேஷமாகச் சில ரூபங்களில் தியானித்தால் நம் மனசு லயிக்கிறது. எல்லா ரூபத்துக்கும் இடம் தருகிற அகண்ட அரூப ஆகாசமாக இருக் கிறவளே பிராண சக்தியாக, மூச்சுக் காற்றாக இருக்கிறாள். அக்னி, ஜலம், பூமி எல்லாம் அவள் வடிவம்தான். இதையெல் லாம் அநுபவிக்கிற நம் மனசும் அவள்தான். 'மனஸ்த்வம்' என்கிற சுலோகத்தில் ஆசார் யாள் இதையெல்லாம் சொல்கிறார்.

இன்னொரு சுலோகத்தில் இரவும் பகலும் அம்பாளின் ரூபங்கள்தான் என்பதை ஆசார் யாள் சொல்கிறார். தாயார் குழந்தைக்குப் பால் கொடுக்கிற மாதிரி சூரியன், சந்திரன் என்கிற இரண்டால் லோகத்துக்கு உணவு அளிக்கிறாள் என்கிறார். சூரியனிடமிருந்து தான் தாவரப் பிரபஞ்சம் க்ளோரோஃபில் உண்டாக்குகிறது; தாவரத்தைச் சாப் பிட்டோ, அல்லது தாவரத்தைச் சாப்பிடுகிற பிராணிகளைச் சாப்பிட்டோதான் எல்லாரும் உயிர் வாழ்கிறோம். (அசைவ உணவு உண்கிற வர்களும் தாவரத்தைச் சாப்பிடும் ஆடு, மாடு, பன்றி போன்றவைகளின் ஊனைத்தான் உண்பார்கள்; மாம்சபட்சணிகளான நாய், பூனை, புலி, சிங்கம் இவற்றின் ஊனை உண்ப தில்லை.) சூரியன் தாவரங்களை வளர்க்கிற மாதிரி சந்திரன்தான் மூலிகைகளை விசேஷ மாக வளர்க்கிறான். அம்பாள் சூரிய வெப்பத் தாலும், சந்திரனின் நிலவாலும் உலகம் முழுவதற்கும் தன் பாலைப் பொழிகிறாள் என்று இதையே ஆசார்யாள் சொல்கிறார். இதெல்லாம் அவளுடைய ரூபங்கள்.

நம் முதுகெலும்புக்குக் கீழேயிருந்து சிரசு உச்சிக்கு யோக சாஸ்திரப்படி குண்டலினி சக்தியை எழுப்பிக் கொண்டு போகிற போது அம்பாள் தாமரைத் தண்டை உடைத்தால் வருகிற நாலிழை மாதிரி அத்தனை மெல்லிய தாக மேலெழும்பிப் போகிறாள் என்று சொல்லியிருக்கிறது. இதுவும் அவளுடைய சூக்ஷ்ம ரூபங்களில் ஒன்று. இத்தனை சூக்ஷ்ம மாக இருந்தாலும் அதுவே கோடி சூர்யப் பிரகாசமாகவும் இருக்கும்; அதே சமயத்தில் உஷ்ணம் துளிக்கூட இல்லாமல் கோடி சந் திரன் மாதிரி குளிர்ச்சியாகவும் இருக்கும்.

இந்த ரூபங்களைத் தவிர சகல சப்தமாக வும், வாக்காகவும் இருக்கிறாள்; விசேஷமாக மந்திர சப்தங்களாக இருக்கிறாள்.

இதெல்லாமே சூக்ஷ்ம ரூபங்கள். நம் போன்ற சாதாரண ஜனங்களுக்காக ஸ்தூல மாகவே லலிதா, துர்க்கா, புவனேசுவரி என்று பல ரூபங்களில் இருக்கிறாள். இந்த ரூபங்கள் நம் கண்ணுக்குத் தெரிகிற மாதிரி புண்ணிய க்ஷேத்திரங்களில் விக்கிரஹங்களாக உள்ளன. வடக்கே ஹிமாசலத்தில் பர்வத ராஜகுமாரி யாகப் பிறந்தவள் தென்கோடியில் கன்யா குமாரியாக நிற்கிறாள். மலையாளத்தில் பகவதியாகவும், கர்நாடகத்தில் சாமுண் டேசுவரியாகவும், தமிழ்நாட்டில் தொண்டை மண்டலத்தில் காமாட்சியாகவும், சோழ தேசத்தில் அகிலாண்டேசுவரியாகவும் பாண் டிய நாட்டில் மீனாக்ஷியாகவும் ஆந்திர தேசத் தில் ஞானாம்பாளாகவும், மகாராஷ்டிரத்தில் துளஜா பவானியாகவும், குஜராத்தில் அம்பாஜியாகவும், பஞ்சாபில் ஜ்வாலா முகியாகவும், காஷ்மீரத்தில் க்ஷீர பவானி யாகவும், உத்தரப் பிரதேசத்தில் விந்த்ய வாஸினியாகவும், வங்காளத்தில் காளியாக வும், அஸ்ஸாமில் காமாக்யாவாகவும் — இப்படி தேசம் முழுவதிலும் பல ரூபங்களில் கோயில் கொண்டு எப்போதும் அநுக்ரகம் பண்ணி வருகிறவள் அவளே!

"பழமையான கரகரப்பான
பற்பொடிகள் உங்கள்
ஈறுகளுக்கும், பற்களுக்கும்
தீங்கு இழைக்கக்கூடும்..."



# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!




பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக் கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும்போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய் நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி நவீன பராமரிப்பு முறையில், உங்கள் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது; மற்றும் வாய் நாற்றத்தையும் உடனே நிறுத்துகிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக் கணக்கில் வரும்!**



...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.

TP.G.21 TM

## ஐம்பத்திரண்டாம் அத்தியாயம்

## பயங்கரச் செய்தி

சக்கரவர்த்தியின் தூதன் சபா மண்டபத்துக்குள்ளே பிரவேசித்தபோது, சபையில் நிசப்தம் நிலவியது.

வந்தவன் நெடிதுயர்ந்த ஆஜானுபாகுவான தோற்றம் அளித்தான். போர்க் களத்திலிருந்து நேரடியாக வந்தவனாகக் காணப்பட்டான். அவனது தலையிலும் முகத்திலும் காயங்களுக்குக் கட்டுக்கள் போடப்பட்டிருந்தன. அவன் உடுத்தியிருந்த துணிகள் இரத்தக் கறையினால் சிவந்திருந்தன.

என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறானோ என்ற ஆவலானது எல்லாருடைய மனத்திலும் குடிகொண்டு வேறு வகை எண்ணங்களுக்கே இடம் இல்லாமல் செய்தது. சபையிலிருந்த அத்தனை பேரின் கண்களும் இமை கொட்டாமல் அத்தூதனை நோக்கின.

அப்படிப் பார்த்தவர்களில் தளபதி பரஞ்சோதியும் ஒருவர் என்று சொல்ல



# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி



வேண்டியதில்லை. மற்றவர்களுடைய மனத்தில் குடி கொண்டிருந்த ஆவல் அவருடைய மனத்திலும் இருந்ததாயினும் அதோடு இன்னொரு வியப்பும் அவர் மனத்தில் ஊசலாடியது. அது இத்தூதனை எங்கேயோ பார்த்திருக்கிறோம் என்ற உணர்ச்சிதான்.

தூதன் சபையில் உள்ளவர்களையெல்லாம் ஒரு தடவை சுற்றி வளைத்துப் பார்த்தான். கடைசியில், அவனுடைய கண்கள் குமார சக்கரவர்த்தியின் முகத்துக்கு வந்து அங்கேயே ஸ்திரமாக நின்றன.

''பல்லவ குமாரா! தங்கள் தந்தையிடமிருந்து மிக முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன். செய்தியை இந்தச் சபையிலேயே சொல்லலாமல்லவா?'' என்று கேட்டான்.

மாமல்லர் முதன் மந்திரியின் முகத்தைப் பார்த்தார். அந்தக் குறிப்பையறிந்த சாரங்கதேவ பட்டர், ''சக்கர வர்த்தியின் செய்தியை இங்கே உள்ளவர்கள் அனைவரும் அறிந்து கொள்ள வேண்டியதுதான்! இங்கேயே தாராளமாகச் சொல்லலாம்!'' என்றார்.

''அப்படியானால் கேளுங்கள்; நான் கொண்டு வந்திருக்கும் செய்தி மிகப் பயங்கரமானது. ஆயினும் சொல்லியே தீரவேண்டும். பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி சிறைப்பட்டார்!''

களங்கமற்ற ஆகாயத்திலிருந்து திடீரென்று பேரிடி விழுந்தது போலிருந்தது அந்தச் சபையிலிருந்தவர்கள் அனைவருக்கும். சிலர், ''என்ன? என்ன?'' என்று அலறினார்கள். சிலர் ஆசனத்திலிருந்து குதித்து எழுந்தார்கள். சிலர் திறந்த வாய் மூடாமல் திகைத்த பார்வையுடன் தூதனைப் பார்த்த வண்ணம் இருந்தார்கள்.

மாமல்லர் பயங்கரமான ஒரு சிரிப்புச் சிரித்தார். அது சபையிலிருந்த அனைவருக்கும் மயிர்க்கூச்சை உண்டாக்கிற்று.

''சக்கரவர்த்தி சிறைப்பட்டாரா? எப்படி? எப்போது? யார் சிறைப்படுத்தினார்கள்?'' என்று மாமல்லர் கர்ஜித்தார். அவருடைய கரம் தன்னையறியாமல் உடைவாளை உருவியது.

''வாதாபி சைனியத்தின் முன்னணிப் படையினால் சக்கரவர்த்தி சிறைப்படுத்தப் பட்டார். நேற்று மாலையிலேதான்! தெற்கேயிருந்து திரும்பியவர் வாதாபி சைனியத்தின் நிலையை அறிந்து கொள்ளுவதற்காக நேரே வட திசை சென்றார். போன இடத்தில் எதிர்பாராத விதமாக வாதாபி வீரர்களால் சிறைப்படுத்தப் பட்டார். பல்லவ குமாரா! சக்கர வர்த்தி என்னிடம் தங்களுக்குச் சொல்லி யனுப்பிய செய்தி இதுதான்: 'என் மகன் தன்



னுடைய இணையில்லா வீரத்தைக் காட்ட வேண்டிய சந்தர்ப்பம் வந்துவிட்டது; வாதாபிச் சைனியத்தை முறியடித்துப் புலிகேசியைக் கர்வபங்கம் செய்து என்னை விடுதலை செய்ய வேண்டிய பொறுப்பு என் வீரப் புதல்வனைச் சேர்ந்தது! மாமல்லனுக்கு இது அசாத்தியமான காரியமல்ல!'- இந்தச் செய்தியைத்தான் தங்கள் தந்தையிடமிருந்து கொண்டு வந்தேன்'' என்று சொல்லி நிறுத்தினான் தூதன்.

மாமல்லர் அப்போது சபையில் இருந்தவர்கள் அனைவரையும் ஒரு தடவை கண்களில் அக்னி ஜ்வாலை எழும்படி பார்த்துவிட்டு, ''சேனாபதி! இப்போதாவது நம் படைகளைக் கோட்டைக்கு வெளியே கொண்டுபோகச் சம்மதிப்பீரா? மந்திரிகளும், அமைச்சர்களும் என்ன சொல்கிறீர்கள்? கோட்டத் தலைவர்களின் அபிப்பிராயம் என்ன?'' என்று இடி முழக்கம் போன்ற குரலில் கேட்டுவிட்டுத் தமக்குப் பின்னால் நின்ற தளபதி பரஞ்சோதியைத் திரும்பிப் பார்த்து, ''தளபதி! நீர்கூட ஏன் இப்படி ஸ்தம்பித்து நிற்கிறீர்? எல்லாரும் அசையாத ஜடப் பொருள்களாக ஆகி விட்டீர்களா?'' என்றார்.

அப்போது முதல் அமைச்சர் எழுந்து ''இந்தத் தூதன் சொல்வது உண்மை என்பதற்கு என்ன ஆதாரம்?'' என்று வினவினார்.

தூதன் உடனே கையிலிருந்த சிங்க இலச்சினையைக் காட்டி, "இதுதான் ஆதாரம்; என் முகத்திலும் உடம்பிலும் உள்ள காயங்கள்தான் அத்தாட்சி!" என்றான்.

"ஆஹா! மகேந்திர சக்கரவர்த்தி பகைவர்களின் கையில் சிக்கிக்கொண்டிருக்கிறார். நீங்கள் ஆதாரம் கேட்டுக் கொண்டு காலம் கடத்துகிறீர்கள் அல்லவா! தளபதி! வாரும், நாம் போகலாம்!" என்று மாமல்லர், பரஞ்சோதியைப் பார்த்துச் சொன்னார்.

ஆனால், தளபதி பரஞ்சோதி ஏதோ ஒரு மனக் குழப்பத்தில் ஆழ்ந்தவராய்க் காயக் கட்டுகளுடன் நெடிதுயர்ந்து நின்ற தூதரின் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

முதல் மந்திரி சாரங்க தேவபட்டர் "இந்தத் தூதனை இதற்கு முன்னால் நர்மில் யாராவது பார்த்ததுண்டா? தூதா! நீ யார்?" என்று கேட்க, தூதன் கூறினான்:

"நான் யாரா? பல்லவ சக்கரவர்த்தியின் அந்தரங்க ஒற்றன். பல்லவ ஒற்றர் படையில் சத்ருக்னனுக்கு அடுத்த பதவி வகிப்பவன். தளபதி பரஞ்சோதி என்னை அடிக்கடி பார்த்திருக்கிறார். தளபதி! என்னைத் தெரியவில்லையா? இந்தக் காஞ்சி நகருக்கு உம்மை அழைத்து வந்த நாகநந்தி நான்தான் என்று தெரியவில்லையா? ஆயனரும் அவர் மகளும் தெரிந்தோ தெரியாமலோ வாதாபி அரசனுக்கு ஒற்று வேலை செய்வதாகச் சந்தேகித்துச் சக்கரவர்த்தி என்னை அவர்களுக்குக் காவலாகப் போட்டார். ஆயனர் புலிகேசிக்குக் கொடுத்த ரகசிய ஓலையை எடுத்துக் கொண்டு நாகார்ஜுன மலைக்கு நீர் கிளம்பிச் சென்றீர். சக்கரவர்த்திக்கு அதை நான் தெரியப்படுத்தியதன்பேரில், அந்த ஓலையைச் சக்கரவர்த்தி உம்மிடமிருந்து பறித்துக் கொண்டார். தளபதி! இதெல்லாம் உண்மையா, இல்லையா?" என்று தூதன் கம்பீரமாகக் கேட்டான்.

தளபதி பரஞ்சோதியின் தலை சுழன்றது. சில சில விஷயங்களை எண்ணிப் பார்க்கும்போது ஒருவேளை அத்தூதன் கூறியது உண்மையாயிருக்கலாமென்று தோன்றியது.

தூதன் மேலும் சொன்னான்: "ஆயனருடன் குண்டோதரன் என்ற பெயருடன் வாதாபி ஒற்றன் ஒருவன் இருந்து வந்தான். அவன் நேற்று ஆயனருடைய செய்தியுடன் வாதாபி சைனியத்தைச் சந்திப்பதற்காகச் சென்றான். அவனைத் தடுப்பதற்காகச் சக்கரவர்த்தியும் நானும் தொடர்ந்து போனபோது எதிர்பாராதவிதமாகச் சளுக்க வீரர்கள் எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள். கடவுள் அருளால் நான் தப்பி வந்தேன்; அவ்வளவுதான் விஷயம். சக்கரவர்த்தி இன்னும் சில பணிகளை எனக்கு இட்டிருக்கிறார். அவற்றை நிறைவேற்றுவதற்கு நான் சத்ருக்னரைத் தேடிப் போக வேண்டும். விடை கொடுங்கள்! நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். நன்கு ஆலோசித்து எது உசிதமோ அவ்விதம் செய்யுங்கள்!"



இவ்வாறு கூறிவிட்டு, தூதன் சபா மண்டபத்தை விட்டு வெளியே சென்றான். மேலும் அவனை ஏதேனும் கேட்கவோ அவனைத் தடுத்து நிறுத்தவோ, யாருக்கும் தோன்றவில்லை.

சபையிலிருந்த அனைவரும் கல்லாய்ச் சமைந்திருந்தார்கள்.

# மலர்ந்த உள்ளங்கள்...



இங்கு காணும் யாவரும்
மனதில் கவலையின்றி சிரித்த முகத்துடன்
இருக்கிறார்கள். சந்தோஷத்துடனும்,
நிம்மதியுடனும் வாழ்கிறார்கள். இவர்கள் அனைவருமே
சுதர்சன் சிட்டின் அங்கத்தினர்கள்.



இன்று மக்களது வாழ்க்கையுடன்
ஒருங்கிணைந்த ஒரே நிறுவனம் சுதர்சன்.
பழங்கால சேமிப்பு முறைகளை பரந்த முறையில்
விஸ்தரித்து மக்கள் கஷ்டங்களிலிருந்து விடுபடவும்,
என்றும் இனிய முகத்துடன்
வாழவும் வழி செய்கிறார்கள்.

**செழுமையின் சின்னம் — சுதர்சன்.**



சுதர்சன் சிட்ஸ் (இந்தியா) லிமிடெட்.
பதிவுபெற்ற அலுவலகம்: கோழிக்கோடு-673011 [illegible] 600014

மாமல்லரின் நெஞ்சில் ஆயிரம் தேள்கள் கொட்டிக் கொண்டிருந்தன. ஆகா! ஆயனரும் அவர் மகளும் வாதாபிக்கு ஒற்று வேலை செய்கிறார்களா? அப்படிப்பட்டவர்களையா நாம் வெள்ளத்திலிருந்து காப்பாற்றினோம்? அந்தச் சிவகாமியிடமா நாம் எல்லையில்லாக் காதல் வைத்தோம்? அவர்களாலேயே இப்போது மகேந்திர பல்லவர் பகைவர்களிடம் சிறைப்பட்டிருக்கிறார்!

அந்தச் சபையிலிருந்தவர்களில் அப்போது மாமல்லரின் மன வேதனையை அறிந்து கொள்ளக் கூடியவர் தளபதி பரஞ்சோதி ஒருவர்தான் இருந்தார். அவர் மாமல்லரின் கரங்களைப் பற்றிக் கொண்டு "இன்னும் என்ன யோசனை! வாருங்கள், போர்க்களத்துக்குப் புறப்படலாம்! அந்த வாதாபி ராட்சதர்களை முறியடித்து நிர்மூலம் செய்துவிட்டுச் சக்கரவர்த்தியை மீட்டுக் கொண்டு வரலாம்! மாமல்லரே! புள்ளலூர்ச் சண்டையை நினைவு கூருங்கள்!" என்றார்.

இதைக் கேட்ட சேனாபதி கலிப்பகையாரும் பிரமையிலிருந்து விடுபட்டவராய், "ஆம்; தளபதி கூறுவது நியாயம்தான். இனி யோசிப்பதற்கு ஒன்றுமில்லை. படைகள் புறப்பட உடனே கட்டளை யிடுகிறேன்!" என்று சொல்லிக்கொண்டு எழுந்தார்.

சபையிலிருந்த அத்தனை பேரும் ஏக காலத்தில் எழுந்து நின்று, "மகேந்திர பல்லவர் வாழ்க!", "அரக்கன் புலிகேசி அழிக!" என்று பலவகையான வீர கோஷங்களைச் செய்தார்கள்.

இந்தக் கோஷங்களுக்கிடையில் சபா மண்டபத்தின் வாசலிலும் ஏதோ குழப்பமான சத்தங்கள் எழுந்தன. குதிரையின் காலடிச் சத்தம், வேல்களும், வாள்களும் உராயும் சத்தம், அதிகாரக் குரலில் யாரோ கட்டளையிடும் சத்தம், தடதடவென்று ஓடுகிற சத்தம் — இவையெல்லாம் கலந்து வந்தன.

ஆம், அச்சமயத்தில் சபா மண்டபத்தின் வாசலில் ஒரு முக்கியமான சம்பவம் நடந்து கொண்டுதான் இருந்தது. சக்கரவர்த்தி சிறைப்பட்ட செய்தியைக் கொண்டு வந்த தூதன் மண்டபத்தின் வாசலுக்கு வந்தபோது, அவ்விடம் குதிரையின் மீது ஆரோகணித்தவராய் சாக்ஷாத் மகேந்திர பல்லவரே வந்து சேர்ந்தார். மண்டபத்தின் வாசலில் காவல் செய்த வீரர்களைப் பார்த்து, அந்தத் தூதனைப் பிடித்துச் சிறைப்படுத்தும்படி சக்கரவர்த்தி கட்டளையிட, வீரர்கள் தட்சணமே அவனை நாற்புறமும் சூழ்ந்து கொண்டார்கள்!

## ஐம்பத்திமூன்றாம் அத்தியாயம்

# பாரவி இட்ட தீ

மகேந்திர சக்கரவர்த்தி சபா மண்டபத்துக்குள் பிரவேசித்தபோது அவ்விடத்தில் ஏற்பட்ட ஆரவாரத்தையும் கோலாகலத்தையும் சொல்லி முடியாது. சற்று நேரம் வரையில் ஒரே ஜய கோஷமும் எதிரொலியுமாக இருந்தது.

மாமல்லர் பாய்ந்து சென்று மகேந்திர பல்லவரைத் தழுவிக் கொண்டார். மந்திரிகளும் அமைச்சர்களும் கோட்டத் தலைவர்களும் சம்பிரதாய மரியாதைகளை மறந்தவர்களாய்ச் சக்கரவர்த்தியைச் சூழ்ந்து கொண்டார்கள். ஏக காலத்தில் பலர் பேச முயன்றார்கள்.

தளபதி பரஞ்சோதி மட்டும் சற்றுத் தூரத்தில் ஒதுக்குப்புறமாக நின்றார். அவருடைய கண்களிலே வெட்கத்தின் அறிகுறி காணப் பட்டது. 'நான்கூட ஏமாந்து போனேனல்லவா? சக்கரவர்த்தியைப் பற்றி இவ்வளவு தெரிந்திருந்தும், அவர் பகைவர்களால் சிறைப்பட்டிருக்கக் கூடும் என்று நம்பி விட்டேனல்லவா?' என்ற எண்ணத்தினால் [illegible] வீர வாலிபர் வெட்கமடைந்தார் போலும்!

ஆரவாரம் சற்று அடங்கியதும், மகேந்திர சக்கரவர்த்தி சபையோரைச் சுற்றி வளைத்துப் பார்த்து, "ஏது, எல்லோரும் ஒரே குதூகலமாயிருக்கிறீர்கள்? உங்களுடைய உற்சாகத்தைப் பார்த்தால் யுத்தத்திலேயே ஜயித்து விட்டது மாதிரி தோன்றுகிறதே? நமது கோட்டைத் தளபதி மட்டும் சிறிது வாட்டமடைந்து காணப் படுகிறார்!" என்றபோது எல்லோருடைய [illegible]களும் பரஞ்சோதியை நோக்க, [illegible]ருடைய வெட்கம் இன்னும் அ[illegible]மாயிற்று.

முதன் மந்திரி சாரங்கதேவர், "பல்லவேந்திரா! தாங்கள் வருவதற்கு ஒரு விநாடி [illegible] முன்னால்தான், நம் [illegible] கோட்டை [illegible] [illegible]யப் புலிகேசி [illegible] போர் [illegible]வதாக நாங்க[illegible] இங்கே தீர் [illegible]த்திருந்தோம். தங்களுடைய வர

வினால் அதற்கு இடமில்லாமல் போய் விட்டதே என்று நம் கோட்டைத் தளபதிக்கு வருத்தமாயிருக்கலாம்!'' என்றார்.

''என்ன? என்ன? நம்முடைய சைனியத்தைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போவதாக உத்தேசமா? இந்த அபூர்வமான யோசனையை யார் செய்தது? சேனாபதி! எப்படி என்னுடைய கட்டளையை மீறத் துணிந்தீர்? உமக்குக்கூட என்னிடம் நம்பிக்கை இல்லாமற் போய் விட்டதா?'' என்று பல்லவேந்திரர் சிம்ம கர்ஜனை போன்ற குரலில் கேட்க, சேனாபதி கலிப்பகையார் தாழ்ந்த குரலில், ''பிரபு! தாங்கள் பகைவர்களால் சிறைப்பட்டிருப்பதைக் கேட்ட பிறகு நாங்கள் எப்படிக் கோட்டைக்குள்ளே பதுங்கிக் கொண்டிருக்க முடியும்? தங்களை விடுவிக்க முடியாத பல்லவ சைனியம் இருந்தென்ன, இல்லாமற் போயென்ன?'' என்றார்.



''ஆகா! நான் பகைவர்களிடம் சிறைப்பட்டிருந்தேனா? இது என்ன கதை?'' என்று சக்கரவர்த்தி கேட்டபோது அங்கே கூடியிருந்தவர்களின் ஆச்சரியத்துக்கு அளவேயில்லாமற் போய்விட்டது.

முதன் மந்திரி சாரங்கதேவர், சற்று முன்னால் சக்கரவர்த்தியின் தூதன் என்று சொல்லிக் கொண்டு ஒருவன் வந்ததையும், அவன் கூறிய அதிசயமான செய்தியையும், அதன் மேல் தாங்கள் தீர்மானித்ததையும் சுருக்கமாகக் கூறினார்.

எல்லாவற்றையும் கேட்டு விட்டு, ''ஆகா! நாகநந்தியடிகள் நான் நினைத்ததற்கு மேலே கெட்டிக்காரராயிருக்கிறார்! சற்று நேரம் தாமதித்து வந்திருந்தேனானால் காரியம் அடியோடு கெட்டுப் போயிருக்குமே!'' என்றார் மகேந்திர சக்கரவர்த்தி.

''பிரபு! அப்படியானால், அந்தத் தூதன் கூறியது பொய்யா? தாங்கள் பகைவர்களிடம் சிறைப்படவில்லையா?'' என்று சேனாபதி கலிப்பகையார் கேட்க, மகேந்திரர் கூறினார்: ''அது பொய்தான். நான் பகைவர்களிடம் சிறைப்படவில்லை. அப்படி நான் சிறைப்பட்டிருந்தாலும் என்னை விடுவிப்பதற்காக நீங்கள் படை திரட்டிக் கொண்டு புறப்பட்டிருக்க வேண்டியதில்லை. என்னை விடுவித்துக் கொள்ள எனக்குத் தெரியும். முன் பின் தெரியாத தூதனுடைய வார்த்தையை அவ்வளவுக்கு நீங்கள் நம்பி விட்டீர்களே? நாகநந்தி நம் எதிரியின் ஒற்றன் என்பதை மாமல்லனாவது பரஞ்சோதியாவது உங்களுக்குத் தெரிவிக்கவில்லையா?''

''பிரபு! தாங்கள் சிறைப்பட்டீர்கள் என்ற செய்தி என்னுடைய அறிவைக் குழப்பி விட்டது. பல்லவ குமாரரும் மனம் கலங்கிப் போய்விட்டார்'' என்றார் பரஞ்சோதி.

''அவன் ஒற்றனா? அப்படியானால் சிங்க இலச்சினை அவனிடம் எப்படி வந்தது?'' என்று முதல் அமைச்சர் கேட்டார்.

''நான்தான் அவனிடம் கொடுத்தேன். இந்த அதி சாமர்த்தியசாலியான ஒற்றனைக் கைப்பிடியாய்ப் பிடிப்பதற்காகவே நான் வடக்குப் போர் முனையிலிருந்து தெற்கே போயிருந்தேன்.''

''பிரபு! எதிரியின் ஒற்றனிடம் சிங்க இலச்சினையை ஏன் கொடுத்தீர்கள்? கொடுத்தபோது அவன் ஒற்றன் என்று தெரியாதா?''

''ஒன்பது மாதங்களுக்கு முன்னாலேயே தெரியும். நமது கோட்டைத் தளபதி காஞ்சிக்கு வந்த அன்றே அந்தச் சந்தேகம் என் மனத்தில் உதித்தது. வாதாபி ஒற்றர்கள் பல்லவ இராஜ்யமெங்கும் பௌத்த சங்கங்களின் மூலமாக வேலை செய்து வருவதை அறிந்தேன். அவர்களையெல்லாம் பிடிப்பதற்காக இத்தனை நாளும் நாகநந்தியை வெளியில் விட்டிருந்தேன். கோட்டை முற்றுகை தொடங்குவதற்குள் நாகநந்

தியை எப்படியாவது பிடித்துவிடவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு தெற்கே போனேன். கடைசியாக, மண்டபப்பட்டுக் கிராமத்தில் கண்டு பிடித்தேன்....''

''என்ன, மண்டபப்பட்டிலா ?'' என்று மாமல்லர் தூக்கிவாரிப் போட்டவராகக் கேட்டார்.

''ஆமாம், மாமல்லா! மண்டபப் பட்டிலேதான். அங்கே நம் ஆயனரையும் சிவகாமியையும் கூடப் பார்த்தேன். அவர்களைப் பெரும் வெள்ளத்திலிருந்து நீ காப்பாற்றியது பற்றிச் சொன்னார்கள். இருவரும் சந்தோஷமாயிருக்கிறார்கள். ஆயனர் அங்கே மலைக் கோயில் அமைக்கும் பணியில் ஈடுபடுவதற்குத் தக்க ஏற்பாடு செய்துவிட்டு வந்திருக்கிறேன். நாகநந்தியைத் தேடிக் கொண்டு மண்டபப்பட்டுக்குப் போனதில் இந்த ஒரு நன்மையும் ஏற்பட்டது....''

ஆயனரும் சிவகாமியும் எதிரிகளின் ஒற்றர்கள் என்று நாகநந்தி கூறிய விஷங் கலந்த வார்த்தைகளினால் புண்பட்டிருந்த மாமல்லரின் உள்ளம் இதைக் கேட்டுக் குதூகலித்தது. அவருடைய மனத்தில் பொங்கிய உற்சாகம் முக மலர்ச்சியாகப் பரிணமித்தது.

''பிரபு! ஒற்றனைச் சிறைப்படுத்தியாகி விட்டதா?'' என்று சேனாதிபதி கலிப்பகை கவலை தோய்ந்த குரலில் கேட்டார். அவருக்குப் போர்க் களத்தில் யுத்தம் செய்யும் முறைதான் தெரியுமே தவிர, இந்த மாதிரி ஒற்றர் தந்திரங்களெல்லாம் தலைவேதனை அளித்தன.

''ஆம், சேனாதிபதி! வாதாபியின் மிகவும் கெட்டிக்காரனை ஒற்றனைச் சிறைப்படுத்தியாகி விட்டது. பாதி யுத்தத்தை நாம் ஜயித்து விட்டது போலத்தான்!'' என்றார் சக்கரவர்த்தி.

உடனே, மாமல்லர் தந்தையிடம் துள்ளி வந்து வணக்கத்துடன் கைகூப்பி நின்று ''பல்லவேந்திரா! பாதி யுத்தத்தைத் தாங்கள் ஜயித்தாகி விட்டது. மற்றப் பாதி யுத்தத்தை ஜயிக்க எனக்கு அநுமதி கொடுங்கள். நம் வீர பல்லவ சைனியத்தை நடத்திக் கொண்டுபோய் வாதாபி அரக்கர் சைனியத்தை அடியோடு அழித்து நிர்மூலம் செய்ய அநுமதி கொடுங்கள். என் அருமைத் தோழர் பரஞ்சோதியையும் என்னுடன் அனுப்பி வையுங்கள்!'' என்றார்.

அப்போது மகேந்திர பல்லவர் மாமல்லரைத் தழுவிக் கொண்டு, ''குழந்தாய்! உன்னுடைய வீரத்தை மெச்சுகிறேன். ஆனால் கொஞ்சம் நான் சொல்வதைக் கேள்!'' என்று கூறிவிட்டு சபையோர்களைப் பார்த்து, ''மந்திரிகளே! அமைச்சர்களே! கோட்டத் தலைவர்களே! எல்லாரும் சற்றுச் செவி கொடுத்துக் கேளுங்கள்: இந்த யுத்தத்துக்கு ஆதி மூலமான காரணத்தை உங்களுக்குச் சொல்கிறேன். பிறகு, உங்களுடைய விருப்பம் என்ன என்பதை எனக்குத் தெரிவியுங்கள்'' என்றார்.

நிசப்தம் நிலவிய மந்திராலோசனை சபையைப் பார்த்து மகேந்திர பல்லவர் மேலும் கூறியதாவது:

''நான் இளம் பிள்ளையாயிருந்த போது யுத்தம் என்ற எண்ணமே இல்லாதவனாயிருந்தேன். என் தந்தை சிம்ம விஷ்ணுவின் வீரப் புகழ் தென்னாடெங்கும் பரவியிருந்தது. நான் பிறப்பதற்கு முன்னாலேயே என் தந்தை கிழைச் சோழ நாட்டைப் பல்லவ இராஜ்யத்துடன் சேர்த்துக்கொண்டார். உறையூர்ச் சோழர்களை அடக்கிக் கப்பம் கட்டச் செய்தார். பாண்டியர்களையும் கர்வபங்கம் செய்தார். மேற்கே கங்கரும் வடமேற்கே கதம்பரும் சிம்ம விஷ்ணு மகாராஜாவிடம் பயபக்தி கொண்ட நண்பர்களாயிருந்தார்கள். வடக்கே வேங்கி நாட்டரசனோ எனக்குத் தாய் மாமன். ஆகவே, யுத்தம் என்ற நினைவே இல்லாமல் நான் வளர்ந்து வந்தேன். சித்திரம், சிற்பம், கவிதை, சங்கீதம், நடனம் ஆகிய கலைகளில் ஈடுபட்டுக் காலம் கழித்தேன். எந்தெந்தத் தேசத்தில் என்னென்ன கலை சிறந்து விளங்கியது என்று அறிந்து, அங்கிருந்து அந்தக் கலையில் வல்லாரைத் தருவித்து இந்தப் பல்லவ நாட்டிலும் அந்தக்கலைகளை வளர்க்க முயன்றேன்.

''இப்படியிருக்கும்போது கங்க மன்னன் துர்விநீதனுடைய சபையில் பாரவி என்னும் வடமொழிக் கவி ஒருவர் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர் வடக்கே அசலபுரத்தில் இருந்தவர். வாதாபி இராஜகுமாரர்களின் சிநேகிதர். புலிகேசியும் அவனுடைய சகோதரர்களும் சிற்றப்பனுக்குப் பயந்து காட்டில் ஒளிந்திருந்தபோது பாரவியும் அவர்களோடு கொஞ்ச காலம் அலைந்து திரிந்தார். பிறகு அவர் கங்க நாட்டு மன்னனுடைய சபையைத் தேடி வந்தார். துர்விநீதனுடைய மகளைப் புலிகேசியின் தம்பி விஷ்ணுவர்த்தனனுக்கு மணம் பேசி முடித்து, அதன் மூலம் புலிகேசிக்குப் பலம் தேடிக் கொடுப்பதற்காக அவர் வந்தார்.

''துர்விநீதன் என்னுடைய தந்தைக்குப் பெரிதும் கடமைப்பட்டவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகையால் கங்கபாடியில் நடக்கும் காரியங்கள் எல்லாம் அவ்வப்போது காஞ்சிக்குத் தெரிந்து கொண்டிருந்தன. பாரவி

சுந்தா எழுதும்

# பொன்னியின் புதல்வர்



அமரர் **கல்கி** யின் வாழ்க்கை வரலாறு

**கல்கி** ஆகஸ்டு 4 இதழில் ஆரம்பம்

---

**கல்கி** ஆகஸ்ட் 4 சிறப்பிதழில்

ர.சு.நல்லபெருமாள் எழுதும்

# திருடர்கள்



அதிர்ச்சி அளிக்கும் நவீனம் ஆரம்பம்

அங்கு வந்திருக்கிறார் என்று கேள்விப் பட்டதும் அவரைக் காஞ்சிக்கு வரவழைக்க வேண்டும் என்று நான் ஆசைப் பட்டேன்! என் தந்தையும் அவ்விதமே துர்விநீதனுக்குச் செய்தி அனுப்பினார். அதன்பேரில் பாரவி இங்கு வந்தார். வந்தவர் காஞ்சி சுந்தரியின் மேல் மோகம் கொண்டு விட்டார்! இந்தக் காஞ்சி நகரின் திருக்கோயில்களும், கலைக்கூடங்களும் இராஜ வீதிகளும் பூந்தோட்டங்களும் பாரவியை அடியோடு கவர்ந்து விட்டன. புலிகேசி வாதாபி சிம்மாசனத்தில் ஏறிய பிறகு, அவனும் அவன் தம்பி விஷ்ணுவர்த்தனனும் பாரவிக்கு ஓலைக்கு மேல் ஓலையாக விடுத்துக் கொண்டிருந்தார்கள் — வாதாபிக்குத் திரும்பி வந்து விடும்படியாகத்தான். ஆனால், பாரவி அதற்கெல்லாம் இணங்கவில்லை. காஞ்சியை விட்டுப் போவதற்கு அவருக்கு மனம் வரவில்லை. புலிகேசியின் ஓலைகளுக்கெல்லாம் பாரவி தம்மால் வர முடியாதென்று மறு ஓலை அனுப்பினார். அவற்றில் காஞ்சி நகரைப் பற்றி வர்ணனைகள் செய்தார். அந்த ஓலைகளில் ஒன்றிலேதான்,

'புஷ்பேஷு ஜாதி புருஷேஷு விஷ்ணு நாரீஷு ரம்பா நகரேஷு காஞ்சி'

என்ற சுலோகத்தை அவர் எழுதினார். இதையெல்லாம் அப்போது படிக்கையில் எனக்கு எவ்வளவோ சந்தோஷமாக இருந்தது. ஆனால், அப்போது அந்தக் கவி பாரவி மூட்டிய தீதான் இப்போது இந்தப் பெரும் யுத்தமாக மூண்டிருக்கிறது. புலிகேசி பாரவிக்கு எழுதிய ஓலை ஒன்றில், 'என்றைக்காவது ஒரு நாள் நான் காஞ்சி நகருக்கு வருவேன். உம்முடைய வர்ணனையெல்லாம் உண்மை தானா என்று பார்ப்பேன்' என்று எழுதியிருந்தான். அதுவும் எனக்குப் பெருமையாயிருந்தது. அப்போது வாதாபி சக்கரவர்த்தி காஞ்சிக்கு வரும்போது அவருக்குப் பிரமாதமான வரவேற்பு நடத்த வேண்டுமென்று எண்ணியிருந்தேன். ஆனால், சபையோர்களே! நான் நினைத்ததற்கு மாறாக இப்போது கோட்டைக் கதவுகளைச் சாத்தி வாதாபி சக்கரவர்த்தியை வெளியே நிறுத்த வேண்டியிருக்கிறது...''

இத்தனை நேரமும் சபையோர் அனைவரையும்போல் ஆவலுடன் மகேந்திரர் கூறிய வரலாற்றைக் கேட்டுக் கொண்டிருந்த மாமல்லர் குறுக்கிட்டு, ''பல்லவேந்திரா! எதற்காக நாம் கோட்டைக் கதவுகளைச் சாத்தித் தாழிட வேண்டும்? வேல்களையும் வாள்களையும் கொண்டு புலிகேசியை ஏன் வரவேற்கக் கூடாது?'' என்றார்.

''ஆம்; வரவேற்கத்தான் போகிறோம். நம் கோட்டைச் சுவர்களின் மீது பல்லவ வீரர்கள் நின்று, வாள்களாலும் வேல்களாலும் சளுக்கர்களை வரவேற்பார்கள். வரவேற்று நம் அகழிகளிலுள்ள முதலைகளுக்கு விருந்தளிப்பார்கள்! நான் சொல்ல ஆரம்பித்ததை முழுவதும் சொல்லி விடுகிறேன். அந்த அரக்கன் புலிகேசி நமது காஞ்சி சுந்தரியின் மேல் எத்தகைய மோகம் கொண்டிருக்கிறான் என்பதை நேரில் நானே பார்த்தேன். ஆகா! காஞ்சியின் சௌந்தரியத்தை நான் வர்ணிக்க ஆரம்பித்ததும், அவனுடைய கண்கள் எப்படி ஜொலித்தன தெரியுமா...?''

''இதென்ன? புலிகேசியைத் தாங்கள் நேரில் பார்த்தீர்களா? எங்கே? எப்போது?'' என்று சாரங்க தேவர் கேட்டார்.

''வடபெண்ணை நதிக் கரையில் சளுக்கர் படைக்கு நடுவில் அவனை நான் பார்த்தேன்'' என்று மகேந்திரர் கூறியதும், சபையில் பெரும் வியப்புக்கு அறிகுறியான 'ஹாஹாகாரம்' எழுந்தது.

''பிரபு! இப்படியெல்லாம் தங்களை அபாயத்துக்கு உட்படுத்திக் கொள்ளலாமா? இந்தப் பெரிய பல்லவ சாம்ராஜ்யம் தங்கள் ஒருவரையே நம்பியிருக்கிறதே!'' என்றார் முதல் அமைச்சர்.

(தொடரும்)



# பார்க்கிற பார்வையிலே!

'ரவை'

"அம்மா! ஒருவேளை காப்பி மட்டும் கொடுத்துடுங்கம்மா!....''

''இதோ பார்! இந்தக் காப்பி கீப்பி பேச்சே வரக்கூடாது. நீ செய்யிற வேலைக்குச் சம்பளம் பத்து ரூபாயே அதிகம். இஷ்டமிருந்தால் செய்....''

கண்டிப்புடன் எஜமானி சொல்லி விட்டதால், வேலைக்காரி கிணற்றடிக்குத் தண்ணீர் இறைக்கப் போய் விட்டாள். என்னிடமே, கட்டிய மனைவியிடமே அவள் கண்டிப்பாகத்தான் பேசுவாள். நான்தான் அடங்கிப் போவேன்.

இது ஏன்?

நான் இரவு பத்து மணிக்குச் சீட்டாட்டத்தில் ரூபாயைத் தொலைத்து விட்டு வீடு திரும்பும்போது விமலா படபடப்பாகத்தான் பேசுவாள். தூங்கி வழியும் குழந்தைகள் கூட எழுந்து வேடிக்கை பார்க்கும். நான் பதிலே பேச மாட்டேன். தவறு செய்தவனுக்கு வாயேது?

பேப்பர் படித்துக் கொண்டிருந்த என் செவியில் விமலாவும் வேலைக்காரியும் பேசிக் கொண்டது விழுந்தான் செய்தது. பாடுபடுகிறவர்களுக்கு வயிற்றுப் பசி தீர வழி செய்ய வேண்டும் என்று நான் என் கம்பெனி முதலாளியிடம் தினமும் காரசாரமாய்ச் சண்டை போடுகிறவன். தொழிற் சங்கத் தலைவன். மின்விசிறிக்கடியில் மேஜையின் எதிரில் அமர்ந்து பேனாப் பிடித்து வேலை செய்கிற குமாஸ்தாக்களுக்கும் பிற்பகல் மூன்று மணிக்கு ஒரு கப் டீ கொடுக்கும்படி ஏற்பாடு செய்தவன் நான். என் வீட்டில், என் மனைவியே வேலைக்காரிக்குக் காப்பி தர மாட்டேன் என்று கூறுவது எனக்குச் சரியாகப் படவில்லை. குறைந்தது ஆறு வாளி தண்ணீர் கிணற்றிலிருந்து இறைக்கிறாள். தினமும் துணி துவைக்கிறாள். பாத்திரங்கள் தேய்க்கிறாள். வீடு பெருக்கித் துடைக்கிறாள். இத்தனை உடலுழைப்புக்கு ஒரு கப் காப்பி கொடுக்கக் கூடாதா?

''இத பாருங்க! அடுத்த மாதத்திலிருந்து பேப்பரை நிறுத்திவிடப் போகிறேன்.''

''ஐயையோ! ஏன்?''

''விலை ஏத்தி விட்டார்கள். அதோடு, ஆபீஸிலேதான் இலவசமாகப் பேப்பர் கிடைக்கிறதே. அங்கே போய்ப் படியுங்களேன். வேலையும்தான் கிடையாது!''



''காலை நேரத்தில் செய்தி தெரிந்து கொள்ளாமல் என்ன செய்ய முடியும்? பத்து மணிக்கு ஆபீஸ் போனதும், நண்பர்கள் பேசும்போது, விஷயம் தெரியாமல் விழிக்க வேண்டியதுதான்.''

''அரட்டை அடிப்பதற்குப் பணத்தை விரயம் செய்ய முடியுமா? சீட்டாட்டத்தில் தொலைப்பது போதாதா?''

இந்த ராம பாணத்தைப் பிரயோகித்து விட்டால் நான் என்னத்தைப் பேச முடியும்?

''என்ன, பேப்பர் படித்தது போதும். குளித்துவிட்டுக் கிளம்புங்கள்!'' விமலா குரல் கொடுத்துவிட்டாள். மணி எட்டே கால்!

''இத பாருங்க! காக்காய் குளியலா? உடம்பு பாதி நனைந்ததும் நனையாததுமாகக் குளிக்காதீங்க. வேலைக்காரியை நிறையத் தண்ணீர் இழுத்துத் தரச் சொல்லியிருக்கேன். முழுகிக் குளியுங்கோ. துணிகள் எல்லாவற்றையும் துவைக்கப் போடுங்கோ. சோப் போட்டு வெளுக்கச் சொல்லியிருக்கேன். வியர்வை நாற்றமடித்துக் கொண்டு நேற்றைக்குப் போட்டுக் கொண்டதையே போட்டுக்க வேண்டாம். என்ன, காதில் விழுந்ததா? எங்கேயோ என்னவோ மழை பெய்யறதுன்னு நிக்காதீங்க.''

என்னுடைய யூனியன் பேச்செல்லாம் விமலாவிடம் செல்லுபடியாகாது. அவளுடைய கண்டிப்பை ஏதும் அசைக்க முடியாது. சொன்னால் சொன்னதுதான். இவளிடம் பேச்சுக் கொடுத்து நேரத்தை வீண் அடிப்பானேன்?

குளித்துச் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குக் கிளம்பினேன். சட்டைக் காலர் மடங்கியிருந்ததைச் சரி செய்தவாறே, விமலா வழக்கம் போலப் பேச்சுக் கொடுத்தாள்.



## ஆபரேஷன் காரணம்!

ஆபரேஷன் தியேட்டருக்குள் கொண்டு போகப் பட்ட பணக்காரரின் நண்பர் ஒருவர், வெளியில் நின்ற டாக்டரிடம் கேட்டார்:

"டாக்டர்! என் நண்பருக்கு எதற்காக ஆபரேஷன் செய்கிறீர்கள்?"

"ஆயிரம் ரூபாய்க்காக...." என்றார் டாக்டர்.

"நான் அதைக் கேட்கவில்லை. ஆபரேஷன் செய்யும்படியாக அவரிடம் என்ன இருக்கிறது?"

"ஆயிரம் ரூபாய்தான்!"



## இடம் மாறிய இதயங்கள்!



இருதய மாற்று ஆபரேஷனுக்கு முன்பாக, ஒரு வாரம் படுக்கையில் இருந்த ஓர் எழுத்தாளர் கடைசியில் ஆபரேஷனுக்குப் போகும்போது டாக்டரிடம் சொன்னார்.

"டாக்டர்! இப்போது இருதயமாற்று ஆபரேஷன், நர்ஸ் நளினிக்குத்தான் செய்யவேண்டும்."

டாக்டர் திடுக்கிட்டார்: "ஏன்?"

"இப்போது என் இதயம் அவளிடம்தான் இருக்கிறது!"

## 'கேபரே' சோதனை!

உலகப் புகழ்பெற்ற துப்பறியும் நிபுணர் ஷெர்லாக் ஹோம்ஸ், விண்ணுலகம் சென்றவுடனே, தேவர்கள் அவருக்கு ஒரு சோதனை வைத்தார்கள்:

"இங்கே உள்ள மனிதர்களில், முதல் மனிதர்கள் - ஆதமும் ஏவாளும் -- யார் என்று உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?"

"ஓ..... முடியுமே....." என்று சாதாரணமாகச் சொன்னார் அவர்.

தேவர்கள் திகைத்தார்கள்: "எப்படி?.... இங்கே எல்லோருமே ஒரே மாதிரியல்லவா இருக்கிறோம்?"

"இங்குள்ளவர்களில் தொப்புள் இல்லாத இருவர்தான், முதல் மனிதர்கள்....." என்றார் துப்பறியும் மேதை!



## பூமிக்கு இன்ஜெக்ஷன்!



உடம்பு பலவீனத்தால் நடுங்குகிறதா? டாக்டர்கள் ஊசி போடுகிறார்கள் நமக்கு.

அதே மாதிரி பூமி நடுக்கத்தைத் தடுப்பதற்கும் பூமிக்கு ஊசி போடலாம் என்று அமெரிக்க விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

பூமிக்கு எப்படி ஊசி போடுவது? பூமிக்குள் பெருங் குழாய்கள் மூலம் இன்ஜெக்ஷன் செய்ய வேண்டும்.

ஊசி மருந்து? தண்ணீர்தான்!

பூகம்பம் ஏற்படக்கூடிய இடங்களில், இப்படிப் பூமிக்குள் தண்ணீரைப் பாய்ச்சினால், பூகம்பங்களைத் தடுத்து விடலாமாம்.

## ஜனாதிபதியின் துணைவியான துணை நடிகை!

அமெரிக்க ஜனாதிபதி நிக்ஸன், 1930-48ம் ஆண்டுகளில் வக்கீலாயிருந்தபோது, திருமதி நிக்ஸன் ஆசிரியையாகப் பணியாற்றினார். இருவரும் 'டார்க் டவர்' என்னும் மர்ம நாடகத்தில் முக்கிய பாத்திரங்களாக நடித்திருக்கிறார்கள். ஓர் அமெச்சூர் நாடகக் குழுவில்தான், இருவரும் முதலில் சந்தித்துக் காதலிக்கத் தொடங்கினார்களாம். திருமதி நிக்ஸன், முன்பு 'பென்ஹர்' 'ஸ்மால் டவுன் கேர்ள்', 'பெக்கி ஷார்ப்' முதலிய திரைப்படங்களில் துணை நடிகையாக நடித்திருக்கிறார்.



தகவல்: 'அவதா'

ஆதாரம்: 'அமெரிக்கன் ரிப்போர்ட்டர்'

"ஜோதிக்கு உடம்பு சரியில்லே. டாக்டரிடம் காட்டணும். சாயங்காலம் சீக்கிரம் வந்துவிடுங்கோ."

"ஜோதிக்கு என்ன உடம்பு?"

"ஜோதிக்கு இரண்டு நாட்களாக உடம்பு கொதிக்கிறது. சோர்ந்து படுக்கிறாள். பகலில் ஜுரம் குறைகிறது. சாயங்காலம் அதிகமா இருக்கு. டைபாய்டா இருக்குமோன்னு பயமா யிருக்கு."

"டாக்டரிடம் காட்ட வேண்டியதுதான். சீக்கிரம் வந்து விடுகிறேன்."

"சீட்டாடினால் ராத்திரி பத்து மணிக்குப் பணத்தையும் இழந்து 'உம்'முனு வந்தீர்களானா எனக்கு ரொம்பக் கோபம் வந்துவிடும். ஜுரமாவது இருந்தால் இருக்கட்டும். செத்தால சாகட்டும்னு விட்டு விடுவேன். இந்த வீட்டுல எனக்கு மட்டும்தான் பொறுப்பா?"

"ஆரம்பித்து விட்டாயா சண்டையை?"

"இத்தனை சண்டை போட்டும் உங்களைத் திருத்த முடியவில்லையே, ஊரிலே உலகத்திலே மத்த ஆண்பிள்ளைகள் நேரா நேரத்துக்கு வீட்டுக்கு வருவதில்லையா? ஒரு நாள், ஒரே ஒரு நாள் சீக்கிரமா வீடு திரும்பப் பாருங்க. டாண்ணு ஆறு மணிக்கு எத்தனை பேர் வேக வேகமாக ஆபீஸிலிருந்து வீடு திரும்பிப் போவதைப் பார்க்கிறேன்."

"நான் வருகிறேன்."

"போய் வாங்க. மறந்துடாதிங்க. சீக்கிரமாக...."

விமலா பேச்சை முடிக்கு முன், நான் வீடு தாண்டித் தெருவுக்கு வந்துவிட்டேன். கேட்டுக் கேட்டுப் புளித்துப் போய்விட்டது. ஒரு நாளா, இரண்டு நாளா? பதினைந்து வருஷங்களாக இதே பல்லவி. என் போக்குத் தெரிந்து, விட்டுக் கொடுத்தாலென்ன?

வைராக்கியத்துடன் ஐந்தரை மணி ஆகியதும் வீட்டுக்குக் கிளம்பினேன். சீட்டாட்ட நண்பர்கள் வழியை மறித்தனர்.

"மிஸ்டர்! என்ன விசேஷம். வீட்டுக்குக் கிளம்பி விட்டீர்?"

"என் பெண்ணுக்கு உடம்பு சரியில்லே."

"அதற்காகவா வீட்டுக்கு ஓடுகிறாய்? முட்டாள் நீ."

"என்னடா சொல்றே?"

"இங்கிருந்து டாக்டருக்கு ஃபோன் பண்ணினா அவரே உன் வீட்டுக்குப் போய்ப் பார்த்து மருந்து கொடுப்பாரு. அதை விட்டுவிட்டு...."

"விஸிட்டிங் ஃபீஸ் பத்து ரூபாய் பிரதர்"

"பத்து ரூபாய் உனக்குப் பெரிய பணமா? ஒரு மணி நேர சீட்டாட்டத்தில் சம்பாதிக்கக் கூடிய பணந்தானே?"

"ஆமாமாம், கூப்பிடுறபோது இப்படிச் சொல்லுங்க. வீட்டுக்கு அனுப்புகிறபோது கையிலே இருக்கிறதைப் பிடுங்கிக்கொண்டு துரத்துவீங்க. எனக்குத் தெரியாதா? போங்கடா. நீங்களே ஆடிச் சம்பாதிங்க. எனக்கு வேண்டாம்."

வழிமறித்து நின்ற நண்பர்களிடையே நீந்திக்கொண்டு மின் ரயிலில் முண்டியடித்து ஏறி, கால் கடுக்க, வியர்வை மழையில் தெப்பமாக நின்று, மீனம்பாக்கத்தில் இறங்கி பத்துப் பைசாக் கொடுத்து ஒரு முழம் பூ வாங்கிக் கொண்டு வீடு வந்து சேர்ந்த என்னை வாசலில் நின்று எதிர்கொண்டழைத்தவள் மனைவி விமலா அல்ல, மகள் ஜோதிதான்!




"அப்பா! அப்பா! நீ சொன்னபடி செய்து விட்டேன். சக்ஸஸ்தான். அம்மா ரொம்பக் கோபமா யிருக்கிறாள்."

"வெரி குட்! சத்தம் போட்டுப் பேசாதே. அம்மா காதிலே விழுந்துவிடப் போகிறது."

என்னைக் கண்டதும், ஏதோ காணாததைக் கண்டு விட்டது போல விமலா திகைத்தாள்.

"என்ன இப்படி மலைத்து விட்டாய்? நீதானே சீக்கிரம் வரச் சொன்னாய்? சீக்கிரம் வரமாட்டேன் என்றுதானே நினைத்தாய்? சரி. ஜோதியை அழைத்துக் கொண்டு டாக்டரிடம் போகலாம். நீயும் வா."

"ஜோதிக்கு டாக்டரும் வேண்டாம், மருந்தும் வேண்டாம். அவள் எக்கேடு கெட்டால் எனக்கென்ன?"

"என்ன விமலா அப்படிச் சொல்லிவிட்டாய்? நம்முடைய சொந்த புத்திரி, ஒரே மகள் அவள்...."

"ஆமாம், நான் சொல்வதைக் கேட்காத கழுதையை மகள்னு சொல்லி என்னை நானே ஏமாற்றிக்கப் போகிறதில்லே. அடங்காப் பிடாரி!"

"என்ன நடந்தது? சொல்லு விமலா."

"அவளையே கேளுங்கோ. அவளைப் பத்திப் பேசவே பிடிக்கலே."

"ஜோதி! இங்கே வா! அம்மா ரொம்பக் கோபமா யிருக்கிறாளே, உன்மீது. என்ன செய்தாய்?"

"அவளை என்ன கேள்வி? பதினைந்தாவது வயசிலேயே படிப்பை நிறுத்திவிட்டு எவன் கையிலேயாவது பிடித்துக் கொடுத்துவிட வேண்டியதுதான். நமக்கு அடங்க மாட்டாள்."

"ஜோதியை டாக்டருக்குப் படிக்க வைக்கணும், வெளிநாட்டுக்கு அனுப்பணும், அப்

படி இப்படின்னு நேற்று வரையிலும் சொல்லிக்கொண்டிருந்தாய். இன்று ஏன் இப்படி?''

'' நான் சொல்றேம்பா நடந்ததை! கிணற்றிலிருந்து அரை வாளித் தண்ணீர் இறைத்தேன். அதற்காக...''

''அரை வாளி, கால் வாளி, அதுவா பிரச்னே? அவளுக்கு வயசென்ன, கிணற்றடிக்குப் போகலாமா? கிணற்றில் தவறி விழுந்து விட்டால் என்ன ஆவது?''

''ஏம்ப்பா! பன்னிரண்டு வயசுப் பெண் இதைச் செய்யக் கூடாதா?''

'' அம்மாவை எதிர்த்துப் பேசாதே, ஜோதி!''

''அது மட்டுமா? செய்வதற்குப் பத்து ரூபாய் கொடுத்து வேலேக்காரி வைத்திருக்கிற போது இவள் எதற்காகத் துணி துவைக்கணும்? கையிலே அழுத்தம் இருக்குமா? முக்கி முக்கித் துவைத்தால் கை காய்த்துப் போகாது?''

''என் கவுனைக்கூடவா நான் துவைத்துக் கொள்ளக் கூடாது? சின்னத் துணிதானே?''

''கேளுங்க. குளியலறையிலே போட்டு வைத்திருக்கிற பத்துப் பாத்திரங்களை — உட்கார்ந்துகொண்டு அரப்புப் பொடி போட்டுத் தேய்க்கிருள். துடைப்பத்தை எடுத்துக் கொண்டு வீட்டைப் பெருக்குகிருள்! செய்யலாமா?''

''ஜோதி! அம்மா சொல்றதெல்லாம் உண்மையா?''

''ஆமாம். நான் அப்படிச் செய்தேன். இதோ பார்! கைகூடக் கொப்பளித்துப் போய் விட்டது. போகப் போகச் சரியாகிவிடும். வேலேக்காரியை நிறுத்திவிடலாம். பத்து ரூபாய் மிச்சந்தானே!''

''பார்த்தீர்களா, பன்னிரண்டு வயசுப் பொண்ணு பேசுகிற பேச்சா இது? திமிர்!''

''விமலா! நான் சொல்வதைக் கொஞ்சம் நிதானமாகக் கேட்கிருயா?''




ஒரு லாரியின் பின்புறத்தில் வலது பக்கம் Passing side என்றும், இடது பக்கம் Suicide என்றும் எழுதப்பட்டிருந்தது! - ஷ்யூமர் - பாலி

''இப்ப என்ன நிதானம் தவறிப்போய் விட்டேன்?''

''இந்தக் கேள்வியே உனக்குப் பொறுமை இல்லேன்னு காட்டுதே''

''சரி, சொல்லுங்க.''

''ஜோதி செய்தது தவறுதான். நான் அவளேக் கண்டிக்கிறேன். அதற்கு முன்பு ஒரு விஷயம். இன்று இல்லாவிட்டாலும் என்ருவது ஒருநாள் பெண்ணுகப் பிறந்தவள் இந்தக் காரியங்களைச் செய்ய வேண்டியவள்தானே?''

''வேண்டாம்னு சொல்றேன். அதற்கும் வயசு இருக்கிறதா இல்லேயா? நானும் பொண்ணுதான். அவளும் பொண்ணுதான். நான் செய்யும் எல்லாவற்றையும் அவள் செய்யலாமா, செய்ய முடியுமா?''

''கரெக்ட். அந்தந்த வயசுக்கேற்றபடி-- தான் காரியங்களைச் செய்ய முடியும். இந்த உண்மை வீட்டுக்காரப் பெண்ணு யிருந்தாலும் சரி, வேலேக்காரப் பெண்ணுக இருந்தாலும் சரி, ஒண்ணுதான் இல்லேயா, விமலா?''

''வேலேக்காரப் பெண்ணு?''

''ஆமாம். நம் வீட்டிலே வேலே செய்கிறவளே நீ வேலேக்காரியாகவே பார்க்கிருயே தவிர. அவளும் உன் மகள் ஜோதியைப் போல் பன்னிரண்டு வயசுப் பெண். வயிற்றுக்கு இல்லாததால் உழைக்கிறது. நம்மாலும் தர்மம் செய்ய முடியாததால், ஏதோ வேலேயை வாங்கிக் கொண்டு அவளுக்குச் சம்பளம் தருகிறோம்.''

''ஆமாங்க.''

''அந்தப் பன்னிரண்டு வயசுப் பெண், நாறு வாளித் தண்ணீர் இறைக்கிறது. துணி துவைக்கிறது, பாத்திரம் தேய்க்கிறது, வீடு பெருக்கித் துடைக்கிறது. அதனிடத்தில் நமக்கு மனிதாபிமானம், பச்சாதாபம் பிறக்கணும்!''

''ஆமாங்க.''

''அவளே நீ இத்தனே நாளாக வேலேக்காரியாகவே பார்த்து விட்டாய். நாளேயிலிருந்து நான் சொன்னபடி பன்னிரண்டு வயசுப் பெண்ணுகப் பார். அதற்கு ஒரு கப் காப்பி கொடுக்காமல், உன் வயிற்றில் ஒரு வாய் காப்பிகூட இறங்காது, விமலா! என்று, நீ ஒரு தாய். அந்தத் தாய்மை உணர்ச்சியை எழுப்பி விட்டேன். இனி அது உறங்காது.''

''நீங்களும் ஜோதியும் எனக்கு இதை உணர்த்துவதற்காகத்தான் நாடகம் போட்டீர்களா? எல்லாம் உங்க ஏற்பாடுதானு?''

''ஆமாம், நாளேயிலிருந்து நீ வேலேக்காரப் பெண்ணுக்குக் காப்பி...''

''கட்டாயம் தரேன். நீங்களும் இந்த மாதிரி நாளேயிலிருந்து சீக்கிரம் வீடு திரும்பி விடுகிறீர்களா?''

''ஜோதியை டாக்டரிடம் அழைத்துப் போய் வந்த பின் சொல்கிறேன்.''

''அவளுக்கு ஜுரம் என்று பொய் சொன்னேன். இல்லேன்ன, நீங்க இப்படிச் சீக்கிரம் வருவீங்களா?''

''அடி கள்ளி! நீயும் ஒரு நாடகம் ஆடிவிட்டாயா?''

''அப்பா! இரண்டு நாடகங்களிலும் நான் தான் கதாநாயகி.''

''இரு. போக்கிரி! பன்னிரண்டு வயசுப் பொண்ணு இப்படிச் செய்யலாமா?''

மூவரின் சிரிப்பிலே புது வாழ்வு மலர்ந்தது.

நீங்கள் எதைச்
செய்தாலும் உங்கள்
பாத்ரூமை அவ்வளவு
செவ்வையாகச்
சுத்தம் செய்ய
முடியாது—

# இரவில்
# தூவும் துளி
# சானி:ஃப்ரெஷ்

PERFUMED ®
Sani
Fresh
LAVATORY CLEANSER

CLEANS!
DEODORISES!
DISINFECTS!



அசிங்கமான
கறைகளைப்
போக்குகிறது

சிறிதும்
சிரமமின்றி
உங்கள்
பாத்ரூமை
பிரகாசிக்கச்
செய்கிறது

உங்கள் குடும்ப
ஆரோக்கியத்தைப்
பாதுகாக்கிறது

பல்சாரா
BALSARA

CHAITRA-BLS 8 TAM



ஆஸ்கார் ஒயில்ட் ஒரு நகைச் சுவைத் துணுக்கைச் சொன்னார். எல்லோரும் விழுந்து விழுந்து சிரிக்க ஒருவர் மட்டும் "மிஸ்டர் ஒயில்ட்! இது பேத்தல் ஜோக். எனக்குச் சிரிப்பே வரவில்லை!" என்றார்.

உடனே ஆஸ்கார் ஒயில்ட் சொன்னார்: "எனக்கும்தான் சிரிப்பு வரவில்லை. ஆனால் என்ன செய்வது? நாமிருவரும் இங்கே சிறுபான்மையோர்தானே!"



பெர்னார்ட் ஷா அனுபவத்தின் வாயிலாகக் கண்டறிந்து சொன்னது இது: "ஒருவர் ஒரு சிரிப்புத் துணுக்குச் சொன்னால் நான் அவர் சொல்லி முடித்ததும் உடனே சிரித்து விடுவேன். இதற்குக் காரணம் அவர் சொன்னது எனக்குப் புரிந்தது என்பதல்ல. நான் சிரிக்காவிட்டால் அவர் மறுபடியும் அந்த 'ஜோக்'கை விளக்கிச் சொல்ல ஆரம்பித்துவிடுவாரே என்ற பயம்தான்!"



ஒரு ஐரிஷ் கோர்ட்டில் நீதிபதி குற்றவாளியைக் கேட்டார்: "உன் நன்னடத்தைக்குச் சான்று கூற இங்கே யாராவது இருக்கிறார்களா?"

"அதோ, நம் ஊர் தலைமை போலீஸ் அதிகாரி இருக்கிறார்" என்றான் குற்றவாளி.

"இல்லை, இவன் யாரென்றே எனக்குத் தெரியாது" என்று அலறினார் போலீஸ் அதிகாரி.

"போதுமா? தலைமைப் போலீஸ் அதிகாரிக்கு நான் யாரென்பது கூடத் தெரியாது. இதைவிட என் நன்னடத்தைக்கு வேறு சான்று என்ன வேண்டும்?"

தொகுப்பு: முரளி

மூலம்: Executive's Treasury of Humour for every occasion.

# ஆப் - கீ - கஸம்

உங்கள் மீது ஆணை !—படத்தின் ஹிந்தித் தலைப்புக்கு இதுவே பொருள்.

வங்க, ஹிந்திப் படங்களைத் தழுவி எடுக்கப்பட்ட பல தமிழ்ப் படங்களைப் பார்த்துள்ள நமக்கு அண்டை மாநிலத்தில் தயாரான மலையாளப் படத்தைத் தழுவி ஹிந்தியில் எடுத்திருக்கிறார்கள் என்று ஆறுதல் அளிக்கிறது! என்றாலும் தழுவலிலேயே காலத்தைக் கடத்தாமல் புதிய புதிய கற்பனைகளுக்குத் திரை உலகு இடமளித்தால் திருப்தியாயிருக்கும்.

ஒரு வரியில் சொல்லப் போனால் 'உங்கள் மீது ஆணை' சந்தேகத்தால் நீண்ட கதை. கட்டிய மனைவியின் மேல் சந்தேகம் ஏற்பட்டு, வதுத்துக் குடும்ப வாழ்வே சிதைந்து போகிறது. ஒரு நல்ல குடும்பத்தின் வாழ்க்கையைக் கெடுத்த தோஷத்துக்காகக் கதையுமே சிதைந்து போகிறது. இருந்தாலும் இளங்காதலர்களின் இன்பச் சுவையை விரசமின்றிக் காட்டும் இடங்கள் தித்திக்கின்றன. இதைக் கண்டு இன்னொரு ஜோடி இன்பம் காண முயல்வது இன்பச் சுவையோடு நகைச்சுவையையும் குழைத்துத் தருகிறது. ரசிக உள்ளங்களையும் இன்புறச் செய்கிறது.

வளர்ந்துவிட்ட திரைக் கலை, இப்படத்தில் பல கட்டங்களில் நாடகமாடுகிறது. சஞ்சீவ் குமார், ராஜேஷ்கன்னா, மும்தாஜ், ரஹ்மான் ஆகியவர்கள் தங்கள் நடிப்பால் அதை மறைக்க முயல்கிறார்கள்; எழுந்து போக விடாமல் ரசிகர்களைக் கட்டிப் போட்டுப் படத்தைப் பிழைக்க வைக்கவும் பாடுபடுகிறார்கள். 'ஜய் ஜய் சிவசங்கர்', 'சோரி சோரி, கப்சே, கப்சே' என்னும் பாடல்கள் செவிக்கு இனிப்பவை.

உங்கள் மீது ஆணை! இது ஒரு நவரசக் கலவை !

— ரா. வீ.





எல். டி. நாராயணசாமி



# எண்களைச் சுழற்றி எண்ணியதைச் சாதித்தவர்

**உயர்பதவிக்கு ஆசைப்பட்டால் போதுமா? கடமையில் கண்ணாயிருந்தால்தான் காரியம் கைகூடும்! இல்லாதபோனால்... ராங் நெம்பர்தான்!**



விஜயலக்ஷ்மி



சென்னை டெலிபோன் நிலையம். மேலதிகாரி ஒருவர் மின் விசிறியை ரிப்பேர் செய்ய எல். ஈ.ஈ. தேறிய அந்த இளைஞரை அழைத்தார். ஏணியை ஒருவர் பிடித்திருக்க அந்த இளைஞர் மின் விசிறியை ரிப்பேர் செய்யும்போது அந்த அசம்பாவிதம் நிகழ்ந்துவிட்டது. அவரை அறியாமல் கைநழுவிய சிறு கருவி அந்த வழியாக வந்த பெண்மணி ஒருவரின் காலைப் பதம் பார்த்துவிட்டது. அவள் 'வீல்' என்று அலறி டெலிபோன் இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகளைக் கூட்டிவிட்டாள். ஏணியின் மேல் நின்ற இளைஞருக்கு அந்தப் பெண்மணியைப் பார்த்ததும் சப்த நாடிகளும் ஒடுங்கிவிட்டன! அவள் டெலிபோன் ஜெனரல் மானேஜர் டி. எஸ். புக்கின் மனைவியார். அந்த இளைஞருக்குச் சிபாரிசு செய்து டெலிபோன் துறையில் வேலைக்கு அழைத்துக் கொண்டவரே புக் அவர்கள்தான். அவரது மனைவிக்கா தம்மால் இந்த இடைஞ்சல் ஏற்படவேண்டும்? என்று பதறிப் போனார் இளைஞர். அதற்கு முன்பு ஒரு ஜெர்மானியக் கம்பெனியில் அப்ரெண்டிஸாக வேலை பார்த்து வந்த இளைஞரை ஆங்கிலேய ஜெனரல் மானேஜர் புக் டெலிபோன் துறைக்கு அழைத்து வந்து வேலை கொடுத்திருந்தார். ஜெனரல் மானேஜர் தம்மை வேலையை விட்டுஅனுப்பிவிடப் போகிறார் என்று அந்த இளைஞர் பயந்து கொண்டிருந்தார்.

டெலிபோன் ஜெனரல் மானேஜர் புக் வந்ததும் நடந்ததை அறிந்து, "உன் வேலையைச் செய்து கொண்டிருந்தாய். அதில் கவனமாயிருக்கும்போது இப்படி நேர்வது சகஜம். வேலை நடக்கும் இடத்தில் என் மனைவி நடமாடியது தவறு! உன் மேல் பிசகு இல்லை" என்றார். இதைக் கேட்டதும் அந்த இளைஞருக்குத் தூக்கி வாரிப் போட்டது. அதைவிடத் தூக்கிவாரிப் போடச் செய்த விஷயம் அடுத்த நாள் புக் அந்த இளைஞருக்கு சூபர்வைசர் பதவி கொடுத்துக் கடிதம் அனுப்பியதுதான்!

அந்த இளைஞர் வேறு யாருமல்ல; டெலிபோன் இலாகாவில் போர்மனாக நுழைந்து, உதவி இன்ஜினியர், டிவிஷனல் இன்ஜினியர், உதவி ஜெனரல் மானேஜர் என்று அடித்தளத்திலிருந்து உழைப்பின் பயனாய்ப் படிப் படியாய்ப் பதவி உயர்வு பெற்று இன்று ஜெனரல் மானேஜராக விளங்கும் திரு எல். டி. நாராயணசாமி.

"பிரிட்டனில் டௌனிங் தெரு பத்தாம் எண் இல்லத்தைப் பார்த்ததும் வில்ஸன் அதில் வசிக்கத் தாம் ஆசைப்படுவதாகச் சொல்லியதோடு, அதை அடையவும் செய்தார் என்று சொல்வார்கள். நான் டெலிபோன் துறையில் பல பதவிகளை வகித்து வந்தபோது ஜெனரல் மானேஜர் அறையைப் பார்த்து, என்றாவது ஒரு நாள் தம் உழைப்பினால் இதில் அமர வேண்டும் என்று மன உறுதி கொண்டதுண்டு. என்றாலும் கடமை உணர்வும்

ஜெனரல் மானேஜர்

பதவி ஏணி

கடவுள் அருளுமே எனக்குப் பதவியைப் பெற்றுத் தந்தன!'' என்று அடக்கத்துடன் சொல்கிறார் திரு எஸ். டி. நாராயணசாமி.

சென்னையில் பிறந்த திரு நாராயணசாமிக்கு சஷ்டியப்த பூர்த்திக்கு இன்னும் இரண்டு ஆண்டுகள் போக வேண்டும். ஜார்ஜ் டவுன் டி. டி. வி. உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி.யும் பச்சையப்பன் கல்லூரியில் இண்டரும் தேறினார். அவரது ஏழ்மை நிலை அவரை மேற்படிப்பைத் தொடர விடாமல் முட்டுக்கட்டை போட்டது. ஆனால் ஜெர்மானிய மானே காக்ஸ் கம்பெனியிலும், டெலிபோன் இலாகாவிலும் பணியாற்றிக் கொண்டே எல். ஈ. ஈ. டிப்ளமாவும், லண்டன் ஏ. எம். டெக். ஐ. பட்டமும் பெற்றார்!

டெலிபோன் இலாகாவின் அடித் தளத்திலிருந்து படிப்படியாக வளர்ந்து உயர் பதவியைத் திரு நாராயணசாமி பெற்றிருப்பதால் அந்த இலாகாவின் செயல் முறைகள் அனைத்தும் அவருக்கு அத்துப்படி!

டெலிபோன் அமைப்புத் துறையில் நிபுணத்துவம் வாய்ந்த இவர் பல ஸ்விட்ச் போர்டுகளைத் தாமே தயாரித்தும் தந்திருக்கிறார்!

''சென்னை நகரில் பத்தொன்பது எக்ஸ்சேஞ்சுகள், 58,382 டெலிபோன் வாடிக்கையாளருக்குத் தகவல் பெற உதவுகின்றன!'' என்று புதிய ஜெனரல் மானேஜர் தகவல் தருகிறார்.

''உங்கள் வாழ்க்கையில் நினைவு கூரும்படியான சம்பவம் ஒன்றைக் கூறுங்கள்!''

''நான் கல்கத்தாவில் டெபுடி ஜெனரல் மானேஜராகப் பணி புரிந்த சமயம். உடல்நலக் குறைவினால் டாக்டர் சட்டர்ஜியைக் காணச் சென்றேன். அவர் வீட்டை அலங்கரித்த படம் என் மனத்தைக் கவர்ந்தது. அவர் யார் என்று டாக்டர் சட்டர்ஜியை வினவினேன். கல்கத்தாவில் சைதன்ய ஆராய்ச்சிக் கழகத்திலிருந்த கௌடிய மடத்தலைவர் தீர்த்த மகராஜிடம் அழைத்துச் சென்றார். அவர் வங்காளி. எனக்காக ஆங்கிலத்தில் உபதேசம் செய்வார். நாளாக ஆக அவரது சிஷ்யராக எனக்கு ஆசை பிறந்தது. என் ஆசையைத் தெரிவித்தபோது 'உன் மனம் பக்குவமாகவில்லை!' என்று கூறிவிட்டார். சிறிது நாள் உடல்நிலை காரணமாக மடத்துக்குச் செல்லவில்லை. பிறகு ஆபரேஷன் நடந்தது. என் மனைவி விஜயலட்சுமி கல்கத்தா வந்து சேர்ந்தாள். விஜயதசமி யன்று தீர்த்த மகராஜ் எனக்கும் என் மனைவிக்கும் தீட்சை வழங்கியது என் வாழ்நாளில் மறக்க முடியாத நிகழ்ச்சி!'' என்று மனமுருகிச் சொல்கிறார் திரு நாராயணசாமி.

தெய்வ பக்தி மிகுந்த குடும்பத்தில் வளர்ந்த திரு நாராயணசாமியின் வீடே ஒரு கோயிலாகக் காட்சி தருகிறது. 'எனது வெற்றிகளுக்கெல்லாம் காரணம் இந்த அம்மாள்' என்று மனம் கசியச் சொல்லித் தம் மனைவி விஜயலட்சுமியைச் சுட்டிக் காட்டுகிறார் அவர். தன்னகத்தில் ஆதரவில்லையானாலும் தொழிலகத்தில் சாதனைகள் புரிவதெப்படி?

திரு நாராயணசாமிக்குக் கடமையும், கடவுள் பக்தியுமே இரு கண்கள். வெற்றிக்கு வழிகாட்ட விஜயலட்சுமி இருக்கவே செய்கிறாள். அவருக்கென்ன கவலை?

— பி. எஸ். எம்.



அணு ஆயுதத்தை வெடித்ததற்குப் பிரதமரையும் மற்றவரையும் பாராட்டுகிறேன். ஆனால் அதை ராஜஸ்தானில் வெடித்திருக்கக் கூடாது. ஞான சூன்யங்கள் நிரம்ப உள்ள புது டெல்லியில் வெடித்திருக்க வேண்டும்.

இல்லஸ்டிரேட்டட் வீக்லி - பானி

## வயசு இருக்கப் பரிசு எதற்கு?

பதினாறுவது பிறந்த நாளையொட்டித் தன் காதலிக்கு என்ன பரிசு கொடுக்கலாம் என்று யோசனை செய்து பார்த்தான். எதுவுமே திருப்தியாக அமையவில்லை.

கடைசியாகத் தன் தாயாரிடம் சென்று ''அம்மா! அம்மா! இப்போது இடையென்று நீ பதினாறு வயது மங்கையாகி விடுகிறாய் என்று வைத்துக் கொள்ளேன். இன்றைக்கே உன் பிறந்த நாள் விழாவும் வந்து விடுகிறது. இந்த நிலையில் என்ன பரிசு கொடுத்தால் உனக்குத் திருப்தியாக இருக்கும்?'' என்று யோசனை கேட்டான்.

தாயார் பூரிப்புடன் சொன்னாள்: ''அப்படி நான் ஆகிவிட்டால்போதும்! அதுவே திருப்தி. வேறு எந்தப் பரிசுமே தேவை இல்லை.''

—கண்ணன்



# அரசியலா? அலட்சியமா?



## அவ்வளவுதான் அதிர்ஷ்டமா?

அல்லது ஒருவேளை ஆடத்தான் தெரிய வில்லையோ?

—என்றெல்லாம் பலவாறாகவும் இந்தியா, இங்கிலாந்தில் அடைந்த கிரிக்கெட் படு தோல்விகள் குறித்துப் பேசுகிறார்கள்.

வெற்றி தோல்விகள் மாறி மாறித்தான் வரும் என்பதை இந்தியக் கிரிக்கெட் ரசி கர்கள் இன்னும் ஜீரணிக்கக் கற்கவில்லை என் கிறார் ''மிடில் ஸ்டம்ப்.''

சுயராஜ்யா கட்டுரையில் அவர் மேலும் கூறுகிறார்: ஏதோ வானமே இடிந்து விழுந்து விட்டது போல் கூப்பாடு போடுவதில் அர்த்தமில்லை. தோல்விக்கான காரணங்களை அமைதியாக அலசி ஆராய்ந்து அடுத்த முறை வெற்றித் தேவதையை நம் பக்கம் வரவேற்க முற்படுவதே நோக்கமாயிருக்க வேண்டும்.

ஈடு இணையற்ற வொரல் உருவாக்கிய கிரிக்கெட் குழு, ஸோபர்ஸ் தலைமையில் தோல்வி காண நேர்ந்தது. உடனே ஸோபர்ஸை ஒழித்துக் கட்டு என்ற கூக் குரலா எழுந்தது? இங்கு மட்டும் வாடே கரைப் பழி வாங்கியே தீர வேண்டும் என்பது போல் பலர் கிளம்புவது ஏன்?

தேர்ந்தெடுக்கப்பட்ட கிரிக்கெட் குழு திருப்திகரமானது. வேகமாகப் பந்து வீசும் ஸல்கோங்கரைச் சேர்த்திருக்கலாம் என்ற சிறு குறை பாட்டிங்கைப் பலப்படுத்த வேண் டும் என்ற நோக்கில் அடிபட்டுப்போகிறது.

ஸ்பின் போலிங்கும் நெருக்கமான ஃபீல் டிங்குமே நமது கட்சியின் பலமாகக் கடந்த பத்து ஆண்டுகளாகவே இருந்து வருகிறது. சந்திரசேகர்தான் நமது துருப்புச் சீட்டு என்பது கிரிக்கெட் நுணுக்கம் தெரியாதவ ளுக்குக் கூடப் புரியும். வாடேகரை விட இதை நன்றாக உணர்ந்த ஒருவர் இருக்க முடியாது. அவ்வாறிருக்கச் சந்திரசேகரை முதல் டெஸ்டுக்கு முன்பும் டெஸ்டுகளுக்கு இடையிலும் சாதாரண மாட்சுகளில் பந்து வீசச் சொல்லி இங்கிலாந்து சீதோஷ்ண நிலைக்கு அவர் உடலும் மனமும் பக்குவப்படு மாறு செய்யவில்லை வாடேகர். இது வியப்பு அளிக்கிறது. இங்கிருந்து நோக்கும்போது நமக்குப் புலனாகாத ஏதாவது வலுவான காரணம் இருந்தாலொழிய வாடேகரின் இந்தப் போக்குப் பெரும் புதிர்தான்.

சந்திரசேகரின் சக்தியைப் பாதுகாத்து வைத்து அவரை டெஸ்ட் மாட்சுகளுக்கு மட்டும் பயன்படுத்தலாம் என்று வாடேகர் எண்ணியிருந்தால் அது தவறான முடிவாகும். இங்கிலாந்தின் சீதோஷ்ண நிலைக்கும் விக் கெட்டுக்கும் சாதாரண கௌண்டி மாட்சு களில் ஆடிச் சந்திரசேகர் பழக்கப்பட்டிருந் தால், இவற்றில் நிறைய விக்கெட்டுகளும் எடுத்திருந்தால் டெஸ்ட் போராட்டத்துக்கு அவர் தயாராயிருந்திருப்பார். மனோதத்துவ ரீதியிலேயே இங்கிலாந்து பாட்ஸ்மன்களை வென்றிருப்பார். சந்திரசேகர் என்றால் இங்கி லாந்து ஆட்டக்காரர்களுக்குக் குலை நடுக்கம்.

ஆனால் நடந்தது என்ன? இங்கிலாந்து சீதோஷ்ண நிலையில் ஆடிப் பழகாத சந்திர சேகர் முதல் டெஸ்டில் தமது முழு ஆற்றலை யும் காட்ட முடியவில்லை. அப்போதும் அவரை முழுமையாகப் பயன்படுத்தாமல் அவ்வப்போது தான் பந்து வீசச் சொன்னார் வாடேகர். இங்கிலாந்து பாட்ஸ்மன்களுக் குக் குளிர் விட்டுப் போயிற்று. சந்திர சேகர் பந்துகளை அடித்து நொறுக்கினார்கள். அவர் பந்துகளையே சமாளிக்க முடியும் என்று கண்டதும் பிறரது பந்து வீச்சுக்கள் தவிடு பொடியாயின.

வார்ட்ஸ் மாட்சில் சந்திரசேகர் விரலில் அடிபட்டுக் கொண்டு பெவிலியன் திரும்பிய

படம்:

● பி. பி. ஸி. ஹிந்தி நிருபர் ஹிமான்ஷு குமாருடன் லண்டனில் இந்திய கிரிக்கெட் வீரர்கள்

நும் நிலைமை மேலும் படுமோசமாயிற்று. நன்றி பாராட்டிய இங்கிலாந்து பாட்ஸ்மன்கள் ரன்களைக் குவித்து இந்தியாவுக்கு எதிராகப் புதிய சாதனை கண்டார்கள்.

நமது பாட்ஸ்மன்களின் பலவீனத்தைக் கொஞ்ச காலமாகவே நமது ஸ்பின் போலிங் பாதுகாப்புக் கவசமாக அமைந்து மறைத்து வந்திருக்கிறது. கேடயம் நீக்கப்பட்டவுடன் பாட்டிங்கின் உண்மை சொரூபம் புரிந்து விட்டது. ஒருிருவரைத் தவிர மற்றவர் ஆர்னல்ட், ஓல்ட் ஆகியோரது படுவேகப் பந்து வீச்சைச் சமாளிக்க இயலாது சரணாகதி அடைந்தார்கள்.

அவர்கள் வேறு என்னதான் செய் திருக்க முடியும்?

தமிழாக்கம்: **குட்டி கிருஷ்ணன்**

## டைம்ஸ் நாளிதழில் ஜான் வுட்காக் முதல் டெஸ்ட் பற்றி எழுதுகிறார்:

''திங்கட் கிழமை மாலை பெய்த மழையினால் 'பிட்ச்' சொத சொதவென்று ஊறியிருந்தாலும் காலை 6 மணி முதல் மேலே மூடப்படாமல் திறந்தே கிடந்ததால் நன்றாக உலர்ந்து விட்டது. பாட்ஸ்மெனுக்குச் சாதகமாக 'பிட்ச்' எத்தனை நன்றாக அமைந்து விட்டது என்பதைக் கருத்தில் கொண்டு பார்த்தால், (வெற்றிக்குத் தேவையான) ரன்களை எடுப்பதற்கு இந்திய அணி இன்னும் தீவிரமாக முயன்றிருக்க வேண்டும். (வெற்றிக்குத் தேவை, 296 ரன்கள் — 360 நிமிடங்களில்) இத் தொடரில் இதை விட நல்ல சந்தர்ப்பம் அவர்களுக்குக் கிடைப்பதரிது. 'வெற்றி கிடைத்தால் நல்லது. ஆனால் முதலில் 'டிரா'வுக்கே முயற்சி செய்வோம்' என்பதே அவர்கள் எண்ணம். அதன் விளைவாகப் பின்னர் இங்கிலாந்தின் கையே மேலோங்கியிருந்தது.''

❖

''வெற்றி பெற்றுத் திரும்பி வரும் கோஷ்டிக்கு வரவேற்பு அளிப்பது அவர்களுக்கு (இந்தியர்களுக்கு) வழக்கமாகியுள்ளது ... எட்க்பாஸ்டனிலும் அவர்கள் மோசமாக விளையாடுவார்களேயானால், வாடேகரின், தலைக்காக மலபார் குன்றின் மீது கழுகுகள் வட்டமிட்டுக் காத்திருக்கும் என்று தெரிகிறது — அதே நேரத்தில் 'பட்டோடி திரும்பவும் விளையாட வர வேண்டும்' என்று அழைக்கும் குரல்களையும் நான் கேட்க முடிகிறது.''

## இரண்டாவது டெஸ்ட் குறித்து:

''முழு நாளும் ஆட்டம் நீடிக்கப் போகிறது என்று எதிர்பார்த்தவர்களுக்குத்தான் எத்தனை ஏமாற்றம்! இந்தியாவில் உள்ள இந்தியர்களுக்கு இது ஒரு பொற் காலத்தின் முடிவாகத் தோன்றும். வெற்றிகள் பல கண்டு பழகிப் போன அவர்கள், இந்திய அணி மிகக் குறைந்த எண்ணிக்கைக்கு 'அவுட்' ஆனது பற்றி அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை. முதல் நாள் ஆட்டம் துவங்கிய போது சூரியன் பளிச்சென்று ஒளிவீசிய மாதிரியே அன்றும் (கடைசி நாள்) இருந்திருந்தால், இந்திய அணியினர் ஓரளவு முயன்று போராடியிருப்பார்கள் என்பது உறுதி. வானம் இருண்டிருந்தது. வெளிச்சம் குறைவு.

❖

இந்தியாவின் (இரண்டாவது) இன்னிங்க்ஸ் சீர்குலைந்த வேகத்தைத் தந்தி பாஷையில் இப்படிக் கூறலாம்:

காலை 11 மணி: மழை இல்லை — பிட்ச் உலர்ந்திருக்கிறது.

11.30: மைதானத்தில் கூட்டம் அதிகமில்லை. குறித்த நேரத்தில் ஆட்டம் துவங்கியது.

12.40: 1938-ல் ஆஸ்திரேலியாவுக்கு எதிராக இங்கிலாந்து மகத்தான வெற்றி பெற்றதற்குப் பிறகு, அதற்கு இணையான அமோக வெற்றியை ஈட்டியது.

தொகுப்பு: **பரணன்**

---

## நம்பரும் நானும்

என் அது இன்றேல்
'என்னது' என்பது இல்லை.
பள்ளித் தேர்விலே என் பெயர் ஓர் எண்.
கல்லூரி ரிஜிஸ்தரில் அட்டண்டென்ஸ் ஓர் எண்.
ஆபீஸ் நாளில் எனக்கோர் பைல் எண்.
ரேஷன் அட்டையில் என் பெயர் ஓர் எண்.
பால் சீட்டுக்கும் எனக்குத் தனி எண்.
சென்ஸஸ் நாளில் எண்ணப்பட்ட நான்
தேர்தல் நாளில் இல்லாததோர் எண்!
என் வண்டிக்கோர் எண், பதிவுக்கொன்று,
சாரதி எனக்குத் தனியே ஒன்று.
பாங்கிக்கொன்று. பாலிசிக்கொன்று.
வீட்டுக்கொன்று. தெருவுக்கொன்று.
[illegible] டைக்கொன்று. ஊருக்கொன்று.
[illegible] எண்கள்,
[illegible] எண்கள்.
[illegible] என் எண்.
பள்ள [illegible] வற்றுடன் பழக எனக்குச் சோம்பல்;
எண்கள் [illegible] னைப் பழி தீர்க்கின்றனவோ?
- தம்பி

# அவனுக்குக் கிடைத்தது—அவளுக்குக் கிடைக்கவில்லை!

டி. கே. டி. துரைராசன்

**ந**ளினா !

மானேஜிங் டைரக்டர் சாந்தாராமுக்கு மகன் — மகள் எல்லாம் அவள் ஒருத்திதான். அந்தக் கம்பெனியே அவள் பெயரில்.

''நளினா ஸ்மால் இண்டஸ்ட்ரீஸ்.''

இன்று அவள் அலுவலகத்துக்கு வந்து— அப்பாவின் அறையில் அமர்ந்து கொண்டு மோகனை அழைக்கிறாள் என்றால்...

அதில் ஏதோ ஒன்று தொக்கி நிற்கிறது.

மோகன், அந்தக் கம்பெனியில், ஃபஸ்ட் அஸிஸ்டெண்டாக வேலை பார்க்கும் பலரில் ஒருவன். இருந்தாலும் அந்தப் பலருக்கும் அவனுக்கும் ஒரு வித்தியாசம் உண்டு.

மிக ஒழுங்காக வேலை பார்ப்பான். வீணாக வம்பளப்பது — டைப்பிஸ்ட் பெண்களை நையாண்டி செய்வது.... ஊஹூம்... துளியும் இடையாது.

அவனை நளினா அழைக்கிறாள் என்றால்....?

நிச்சயம் அதற்கு ஏதோ ஒரு காரணம் உண்டு !

மோகன் அறைக்குள் நுழைந்தான்.

''உங்களுக்கு நான் என்ன உதவி செய்யட்டும் ?'' என்று கேட்டான் மோகன் சற்று மிடுக்கோடு.

எம்.டி.யிடமே அவன் அப்படித்தான் பேசுவான். இவள் என்ன சுண்டைக்காய்!

''உட்கார்ந்து பேசக் கூடாதா?'' என்றாள் நளினா ஆங்கிலத்தில். கான்வெண்ட் படிப்பு. ஆங்கிலம் 'கணகண'வென்றிருந்தது.

மோகன் அமர்ந்தான்.

''நம்முடைய தொழிற்சாலையின் விஸ்தரிப்பு சம்பந்தமான ஃபைல்களையெல்லாம் நீங்கள்தானே பார்க்கிறீர்கள் ?'' என்று கேட்டாள் நளினா.

''ஆமாம். நான்தான் பார்க்கிறேன்.''

''தொழிற்சாலையை மேற்கொண்டு விஸ்தரிப்பதற்காக டில்லிக்கு.... அதாவது கனரகத் தொழில் மந்திரிக்கு எழுதியிருப்பதாக அப்பா சொன்னார். இன்னும் அங்கிருந்து பதில் வரவில்லையாமே ?''

''இன்னும் பதில் வரவில்லை.''

''சரி ! என் சிநேகிதியின் கணவர் அந்த இலாகாவில் அண்டர் செக்ரடரியாக இருக்கிறார் !''

''ஓஹோ ! அப்படியா ?''

''இன்று அவள் டில்லிக்குப் போகிறாள். அந்த விவரங்களையெல்லாம் சொன்னால் உடனே ஆக வேண்டியதைக் கவனிப்பதாகக் கூறினாள்.''

''அவளது பெருந்தன்மைக்கு நன்றி கூறலாம் !''

''எனக்கு அந்த விவரங்கள் வேண்டும். உங்களிடம் கேட்டால் தருவீர்கள் என்று சொல்லிவிட்டு அப்பா ஒரு கல்யாணத்துக்காகக் காஞ்சீபுரம் போயிருக்கிறார். விவரங்களைக் கொண்டு தர முடியுமா ?''

மோகன் சில வினாடிகள் பதில் பேசவில்லை. மௌனம். ஏதோ சிந்தனையும்கூட.

''என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் நளினா.

''இல்லை... மானேஜர் லீவு. அஸிஸ்டெண்ட் மானேஜரும் லீவு. இருவரும் விடுமுறையில் இருக்கிறார்கள். யாரிடமாவது ஒரு வார்த்தை கேட்டுக் கொண்டு...''





அவன் பேசி முடிக்கவில்லை. அவள் குறுக்கிட்டாள்.

''தேவையில்லை. அப்பாதான் உங்களிடம் கேட்கச் சொன்னார்.''

''ஆனால் என்னிடம் சொல்லவில்லையே...? இது வியாபாரம் சம்பந்தப்பட்ட விஷயங்கள். எனக்கு மேலே உள்ளவர்களின் அனுமதியில்லாமல்...''

''நான் எம்.டி.யின் மகள். என்னிடம் சொல்வதில் என்ன குடி முழுகிவிடும்? இந்தத் தொழிற்சாலையை விஸ்தரிப்பதில் எனக்கு அக்கறை இல்லையா?'' — கொஞ்சம் கொஞ்சமாக அவள் பேச்சில் சூடேறிக் கொண்டு வந்தது.

''மன்னிக்கணும். நான் கொடுப்பதற்கில்லை!''

''அப்பாவிடம் இதைச் சொல்லப் போகிறேன். இதனால் வரும் விபரீதங்களை நீங்கள் அனுபவிக்க நேரிடும்!'' என்று சீறினாள்.

மோகன் பதில் பேசவில்லை.

''என்ன பேசாமல் இருக்கிறீர்கள்?''

''அதுதான் சொன்னீர்களே, எம். டி.யிடம் சொல்லப் போவதாக. சொல்லுங்கள்!''

நளினாவுக்கு வாயடைத்துப் போயிற்று.

''அவ்வளவுதானே? நான் போகலாமா?'' என்று கேட்ட மோகன் நளினாவின் பதிலுக்குக் காத்திராமல் வெளியேறினான்.

மறுநாள்.

எம். டி. வந்ததும் வராததுமாக மோகனை அழைத்தார். சாதாரண விஷயத்துக்கே காட்டுக் கூச்சல் போடக் கூடியவர் அவர். இப்போது மகள் என்னமாய்ச் சாவி கொடுத்து அனுப்பியிருக்கிறாளோ!

எம்.டி.யின் அறைக்குள் நுழைந்து ''குட் மார்னிங் சார்'' என்றான்.

பதிலுக்குக் 'குட் மார்னிங்' வரவில்லை. ஜன்னல் பக்கமாக எதையோ பார்த்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார் அவர்.

திரும்பவும் ''குட் மார்னிங் சார்!'' என்றான் மோகன். ஆசாமிக்குக் கொஞ்சம் காது மந்தம் என்று தெரியும்.

எம்.டி. இப்போது திரும்பி மோகனைப் பார்த்தார்.

''மோகன்! என் மகளைப் பெரிதும் புண்படுத்தி விட்டீர்கள்!...'' என்று அமைதியாக ஆரம்பித்தார் எம். டி. அது அவர் சுபாவம். பின்னால்தான் வெடிப்பார்.

''இல்லை; நான் அப்படி நினைக்கவில்லை...''

''உண்மையாகவா?''

''எஸ் சார்! கம்பெனி விவரங்களை மேலதிகாரிகளின் அனுமதி இல்லாமல் கொடுக்க முடியாது என்றுதான் கூறினேன்.''

''இந்தக் கம்பெனியே அவள் பேரில்தான் இருக்கிறது. எனக்குப் பிறகு லட்சக் கணக்கான இந்தச் சொத்துக்கள் அவளுக்குத்தான் சேரும். உனக்கு இது தெரிந்திருக்கும் என்று நம்புகிறேன்'' — இன்னும் அமைதியாகத்தான் பேசினார்.

''ஆமாம் சார்... எனக்கு அது தெரியும்.''

''பிறகேன் கொடுக்கவில்லை? நான் கொடுக்கச் சொன்னதாக என் பெயரை வேறு அவள் சொல்லியிருக்கிறாள். இருந்தும் கொடுக்கவில்லையென்றால் அதற்கு என்ன அர்த்தம்?'' ஆயிற்று. கூச்சல் தொடங்கி விட்டது. இனி அது ஊரெல்லாம் கேட்கும். மோகன் தலையைக் குனிந்து கொண்டான்.

''கமான்... கேட்டதற்குப் பதில் சொல்.''

''ஸார்! உங்கள் பெயரைப் பயன்படுத்திக் கேட்டோரிடமெல்லாம் கம்பெனி விஷயங்களைக் கூறலாம் என்றால் பிறகு இங்கே ரகசியம் என்பதே ஏதுமிராது!''

''மை டியர் மோகன்... என் மகள் வைத்த பரீட்சையில் நீ தேறிவிட்டாய். அஸிஸ்டெண்ட் மானேஜர் பதவிக்கு யாரைப் பதவி உயர்வு செய்வது என்று தெரியாமல் நான் குழம்பிக் கொண்டிருந்தபொழுது நளினாதான் இந்த யோசனையைச் சொன்னாள். உனக்குப் பதவி உயர்வு கிடைக்கப் போகிறது!'' என்று எம். டி. சொன்னதை மோகனால் நம்ப முடியவில்லை.

''மிக்க நன்றி சார்!''

''மற்றொரு விஷயம்! என் மகள் எனக்கு நம்பகமான ஒரு அஸிஸ்டெண்ட் மானேஜரைத் தேடித் தந்து விட்டாள். அதுபோல் அவளுக்கு நான் ஒரு நல்ல கணவனைத் தேடித் தரவேண்டுமல்லவா? நீ சரியென்றால், நானே உன் பெற்றோர்களிடம் பேசுகிறேன்.''

''மன்னிக்கணும் சார்... எனக்காகவே என் அக்கா மகள் காத்திருக்கிறாள்'' என்றான் மோகன் தயக்கியவாறு.

''அப்படியா?'' என்று சில விநாடிகள் யோசித்த எம். டி. ''பரவாயில்லை. இருந்தாலும் உனக்குப் பதவி உயர்வு கிடைக்கப் போகிறது!'' என்று சொல்லி விட்டுத் திரும்பியபொழுது அவர் கண்களும் மோகனின் கண்களும் இலேசாகக் கலங்கியிருந்தன.



# விண்ணும் மண்ணும்

கி.ராஜேந்திரன்

அவனுடைய காதலாவது நிறைவேறி யிருந்தால் அவனுக்கு ஆறுதலாக இருந்திருக்கும். ஆனால் எப்போது அனுபமா மைக்கேலின் இதமான மனத்துடன் கூடிய மென்மையான மலர் போன்ற காதலை ஏற்றுக் கொண்டு விட்டாளோ இனி அங்கே எரிமலைக் கொப்பான தனஞ்செயனின் காதல்

## 51. துயரச் சம்பவம்

பிரான்ஸ் நாட்டின் விஞ்ஞானி ஒருவருடன் அளவளாவி விட்டுத் திரும்பிய இந்திய ராக்கெட் நிபுணர் ஒருவர் பேச்சுவாக்கில் கூறிய ஒரு விஷயம் தனஞ்செயனின் ஞாபகத்துக்கு வந்தது. பெரிய, நவீன ராக்கெட்டின் ஓர் உபகரணம் பற்றிய அறிவாற்றலைப் பெற முடியாமல் பிரெஞ்சு விஞ்ஞானி தவித்துக் கொண்டிருந்த போது யதேச்சையாக அமெரிக்க நாளிதழ் ஒன்றில் அந்த விவரங்களைப் பார்த்து விட்டு அதிசயித்தார்களாம்! விண்வெளி வெற்றிக்கு ஆயிரக் கணக்கான தனியார் துறை நிறுவனங்கள் அமெரிக்காவில் உதவுகின்றன. ஆனபடியால் குறிப்பிட்ட உபகரணத்தைத் தயாரித்து அளிக்க 'டெண்டர்' விளம்பரம் போட்டிருந்தது 'நாஸா!' அதில் அந்த உறுப்பின் தன்மை, அமைப்பு விவரங்கள் முழுமையாக இருந்தன!

அந்த அளவுக்குச் சுதந்திரம் உள்ள நாட்டிலிருந்து மைக்கேல் எஃப். பி. ஐ. யின் எச்சரிக்கையையும் மீறிப் புறப்பட்டு வந்ததில் வியப்பில்லை. இதுவே அமெரிக்காவாக இராமல் ருஷ்யாவாக இருந்திருந்தால் தன் ஜம்பம் சாய்ந்திருக்குமா? என்று தனஞ்செயன் எண்ணிப் பார்த்தான். சந்தேகம் ஏற்பட்ட மறுகணம் விஞ்ஞானியைச் சிறைப்படுத்தி விருப்பார்கள். தனஞ்செயனையும் நாடு கடத்தியிருப்பார்கள்! இதைக் கருதிய போது அவனை அவமானம் பிடுங்கித் தின்றது. மைக்கேலையும் அனுபமாவையும் அழைத்து வந்ததில், பாரதத்துக்காக உழைக்க வைத்ததில் தன்னுடைய பங்கு பூஜ்யம் என்பதாகப் புரிந்து போயிற்று. அதை மைக்கேல் நன்றாக விளங்கிக் கூறியாகி விட்டது. போதாக்குறைக்கு அவன் எஃப். பி. ஐ. யிடம் படுதோல்வி அடைந்திருப்பதை மெய்ப்பிப்பதே போல் அவன் கரத்தை விஷ மாத்திரைகள் அடங்கிய பெட்டியொன்று அலங்கரித்துக் கொண்டிருந்தது! இந்த மாத்திரைகளை நாமே விழுங்கி விட்டால் என்ன என்று நினைக்குமளவுக்குத் தனஞ்செயனை வெட்கம் சூழ்ந்தது. மேற்கொண்ட பணி வெற்றிதான் என்றாலும் வெற்றிக்குக் காரணமானவன் அவனே என்பதாக அவன் மேலதிகாரிகள் கருதிப் போற்றத் தயாராயிருந்தார்கள் என்றாலும் அவன் உள்ளத்துக்கு உண்மை தெரியும். அதனை ஏமாற்ற முடியாது.



பெருக்கு எடுபடாது. இது அவனுக்குப் புரிந்து போயிற்று. விட்டுக் கொடுப்பது என்ற அம்சத்தில் மைக்கேல் அவனைத் தோல்வி காணச் செய்து அனுபமாவை வெற்றிப் பரிசாக அடைந்து விட்டான். தனஞ்செயனுக்கு எடுத்துக் கொள்ளத்தான் தெரியுமே தவிர, கொடுக்கத் தெரியாது; உத்தர விடத்தான் அவனால் முடியுமே தவிர வேண்டிக் கொள்ள முடியாது. அமைதியான ஆராய்ச்சிகளிலேயே காலத்தை ஓட்டி வந்தவள் அவனது இந்த மாறுதலான இயல்பினால் கவரப்பட்டிருக்கலாம்; ஓர் ஒற்றனின் சாகஸங்கள் அவள் உள்ளத்தில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியும் இருக்கலாம்.

உக்கிரமான சூரியக் கிரணங்கள் மேலே பட்டதும் சிலிர்த்து இதழ் விரித்துச் சிரிக்கும் தாமரை, தான் வாழ்க்கைப்பட்டிருப்பது அமைதியான தடாக நீரத்துக்குத்தான் என்பதை மறந்து விட முடியுமா? மைக்கேல் என்னும் நீர் நிலையிலிருந்து தான் பிரிக்கப்பட்டு விட்டால் பிறகு தனஞ்செயனெனும் சூரியனின் கிரணங்கள் இதமாய் இராது, தன்னைச் சுட்டுப் பொசுக்கி வாடி வதங்கச் செய்து விடும் என்பதாக அனுபமா புரிந்து கொண்டு விட்டாள்.

அவளுடைய இந்த முடிவுக்குத் தலை வணங்கினானோ அல்லது வெட்கித் தான் தலைகுனிந்தானோ எப்படியானாலும் சரி, சிரம் தாழ்த்தியபடியே தான் பேசினான் தனஞ்செயன்.

''ஒரே ஒரு சாதனையையாவது நான் புரிந்திருப்பதாய் நீ ஒப்புக் கொள்வாய் என்று நம்புகிறேன் மைக்! அனுபமா தன்னைத்தானே உணர்ந்து கொள்ள உன்னிடம் அவளுக்குள்ள காதலை அவளே சரியானபடி புரிந்து கொள்ள இந்தப் பயணம் உதவியிருக்கிறது. இல்லாத போனால் அவள் இன்னமும் ஒரு முடிவுக்கு வர முடியாமல் குழம்பியவாறுதான் அமெரிக்காவில் இருந்து கொண்டிருப்பாள்!''

''அது முற்றிலும் உண்மை. அதற்காக நன்றி பாராட்டவும் செய்கிறேன்'' என்று கூறி அவன் தோள்களைப் பற்றினான் மைக்கேல். ''அனுபமாவும் வந்தனம் தெரிவிப்பாள் நிச்சயம்!'' இப்படிக் கூறி விட்டு அனுபமாவைப் பார்த்தான் மைக்கேல்.

''தனஞ்செயனுக்கு நான் நன்றி கூற வேண்டியதுதான்'' என்ற அனுபமா, மைக்கேலின் கைவிரல்களைப் பற்றிக் கொண்டாள். ''அத்துடன் இந்தக் கரங்களுக்கு உரியவரை நாங்கள் இருவருமே நன்றியுடன் போற்றக் கடமைப் பட்டவர்கள். எங்கள் கோரிக்கைக்கு இணங்கியிருக்கிறீர்கள் அல்லவா?''

மைக்கேலின் புறங்கையை அனுபமா தன் முகத்துக்கு உயர்த்தியபோது அவளுடைய இதழ்களின் ஈரம் மட்டுமின்றிக் கண்களில் ஈரமும் அதில் பட்டது.

அவள் தொடர்ந்து கூறினாள்: ''மைக்! என்னை மன்னித்து விடு நான் அமெரிக்காவுக்கு மட்டுமல்ல; என் மனச்சாட்சிக்கே கூடத் துரோகம் இழைத்துக் கொண்டிருக்கிறேன். இவர்கள் செயற்கைச் சந்திரனை விண்வெளிக்கு அனுப்பவே ராக்கெட் தயாரிப்பதாகச் சொல்கிறார்கள். ஆனால் அத்தகைய சக்தி வாய்ந்த ராக்கெட் உருவாகி விட்டால் அதனைக் கண்டம் விட்டுக் கண்டம் பாயும்—தேவையாயின் அணுகுண்டைக் கூட ஏந்திச் செல்லும் — ஏவுகணையாகவும் பயன்படுத்தலாம் என்பது எனக்குத் தெரியாதது அல்ல. கொடிய யுத்த தளவாடங்கள் செய்து குவிக்கப்படுவதை நான் அடியோடு வெறுப்பவள். அந்த ஆற்றல் பரவுவதையும் நான் விரும்பவில்லை; அமெரிக்காவுக்குத் துரோகம் இழைக்கவும் நினைக்கவில்லை. இருந்த போதிலும் கூட ... உன்னை இந்த நீசத்தனமான காரியத்தில் ஈடுபடுத்தாமலிருக்கவும் என்னால் முடியவில்லை!''

அவள் தலையைக் கோதி விட்டு அன்புடன் மொழிந்தான் மைக்கேல்: ''அனு! நீ இனிமேலும் சமாதானங்கள் சொல்ல வேண்டும் என்கிற அவசியம் இல்லை. உன் மனம் எனக்கு முழுமையாகத் தெரிந்து போயிற்று. பாரதத்துக்கு உதவுவது என்று எப்போது தீர்மானித்து விட்டோமோ இனி அந்த முடிவின் படியே நடப்போம். பிராயச்சித்தமாக தேசப் பிரஷ்டத்தையும் தீவாந்திர சிட்சையையும் அனுபவிப்போம்.''

மைக்கேலின் குரல் தழுதழுத்தது.

இதுசமயம் வாசலில் காவலிருந்த சீனன் சற்றுப் பரபரப்போடு உள்ளே வந்தான். ''வாக்கி டாக்கி''யைத் தனஞ்செயனிடம் தந்தான். ரேடியோவில் பல்வந்த் சிங்கின் குரல் ஒலித்தது: ''தனஞ்செயன்! மனத்தைத் திடப்படுத்திக் கொள். உன்னை அழைத்துப் போகவென்றே நான் திருவனந்தபுரம் வந்திருக்கிறேன். ஒரு துயரகரமான சம்பவம் நடந்து விட்டது...''

கேட்டுக் கொண்டிருந்த அனைவரது முகங்களுமே வெளிறிப் போயின. தனஞ்செயன் சமாளித்துக் கொண்டு, ''என்ன விஷயம்?'' என்றான்.

''தனிமையில் உன்னிடம் பேச நினைக்கிறேன். நீ உடனே விசைப்படகில் ஏறி இங்கு வா.''

''என் அருகில் உள்ள நண்பர்களுக்குத் தெரியக் கூடாத அரசாங்க ரகசியமாயிருந்தாலொழிய நீங்கள் இப்போதே விஷயத்தைச் சொல்லலாம்'' என்றான் தனஞ்செயன்.

''அப்படியானால் சரி கூறுகிறேன். உன் நண்பர்களின் ஆறுதலும் உனக்குத் தேவைப்படும்'' என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்துப் பேசினார் பல்வந்த் சிங். கேட்டுக் கொண்டேயிருந்த தனஞ்செயனின் தேகம் பாதாதிகேசம் நடுங்கியது. ''சாந்தி'' என்று அலறியபடி நெற்றியில் மடேரென்று போட்டுக் கொண்டான். ''சாந்தி! சாந்தி!'' என்று திரும்பத் திரும்பக்

கதறிக் கண்ணீர் பெருக்கியபடி தரையில் சரிந்தான். மைக்கேல் அவனை அள்ளி எடுத்து அணைத்துக் கொண்டான். அனுபமா அவன் கரங்களைப் பற்றியபடி, ''அமைதியாயிருங்கள்; அமைதியாயிருங்கள்'' என்று துக்கம் ததும்பும் குரலில் கெஞ்சினாள். ''அமைதியாயிருப்பதா?'' என்று அழுது கொண்டே கேட்டான் தனஞ்செயன். ''அனு! என்னுடைய சாந்தி என்னை விட்டு விட்டுப் போய் விட்டாள் அனு! 'இன்றைய உலகுக்கு மிகவும் தேவைப்படும் ஒன்றைத் தன் பெயராகக் கொண்டிருக்கிறாள் உங்கள் தங்கை' என்று பெருமிதத்துடன் குறிப்பிட்டாயே அந்தச் சாந்தி என்னை விட்டு, நம்மை விட்டு, இந்த உலகை விட்டே போய் விட்டாள் அனு! நான் எப்படி அமைதியாயிருப்பேன்!'' என்று அழுது புலம்பினான்.

அதுவரை அடக்கி ஆளப்பட்ட அனுபமாவின் துயரமும் அந்தக் கணத்தில் கட்டுடைத்துக் கொண்டு பெருக்கெடுத்தது.

மைக்கேல் யாரைச் சமாதானப் படுத்துவது என்று புரியாமல் தவித்து, கடைசியில் அம்முயற்சியில் பயனில்லை, தானாகவே துயரம் சற்று அடங்கும் வரை காத்திருக்க வேண்டியதுதான் என்ற முடிவுக்கு வந்தான்.

## 52. அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி!

தனஞ்செயனுக்கு ஏற்பட்ட அதிர்ச்சி அத்துடன் முடிந்து போகவில்லை. ஆனால் பல்வந்த் சிங்கின் வாயால் புதிய அதிர்ச்சி தரும் செய்திகளைக் கேள்வியுற்ற போது அவன் துயரம் தாங்காமல் துடித்து அழவில்லை. மாறாகப் பிழியக் கூடிய கண்ணீரையெல்லாம் ஏற்கனவே கொட்டி வற்றி விட்டனவாக அவன் கண்கள் இருந்தன. அவர் பேசப் பேச அவன் மனம் துக்கத்தில் ஆழ்ந்து போவதற்குப் பதில் வைராக்கியத்தில் உறுதியடைந்து கொண்டிருந்தது!

சாதாரணிய விஷயங்களையா சொன்னார் பல்வந்த் சிங்? கொடுமை, கொடூரம், கயமை, அரக்கத்தனம் என்ற வார்த்தைகளையெல்லாம் விடச் சக்தி வாய்ந்த ஏதேனும் ஒரு வார்த்தை இருக்குமானால் அதுவும் போதாது அதை வர்ணிக்க.

திடீரென்று ஏற்பட்ட ஒரு நோய் நொடியினாலோ அல்லது ஒரு விபத்தினாலோ சாந்தி மாண்டு போயிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். ஆனால் அவள் கொலை செய்யப் பட்டல்லவா மடிந்திருக்கிறாள்? அந்தக் கொலையும் அவள் கற்பைச் சூறையாடிய பின் நிகழ்ந்திருக்கிறது!

ஓர் அவசரத்துக்கென்று பயன்படுத்திக் கொள்ளப்பட்ட ராணுவ விமானத்தில் டில்லி நோக்கித் திரும்புகையில் கொஞ்சம் கொஞ்சமாக விஷயத்தை வெளியிட்டார் பல்வந்த்சிங், அதிர்ச்சியை இயன்றவரை குறைக்கும் நோக்கில். ஆனால் தனஞ்செயன் அதிர்ச்சியினாலோ துயரத்தினாலோ பாதிக்கப்படுகிற நிலைக்கு அப்பால் போய் விட்டான். அவர் கூறுவதைக் கேட்கக் கேட்க அவன் உள்ளம் உயிர் பலி கொள்ள ஏங்கியது. பழி வாங்கத் துடித்தது. இதற்குக் காரணமாயிருந்தவன் யாராயினும் சரி, அவனைத் தன் கையினாலேயே கழுத்தை நெரித்துக் கொன்றாலொழியச் சாந்தியின் ஆன்மா சாந்தி பெறாமல் சதா தன்னைச் சுற்றி வந்து கொண்டிருக்கும் என்பதாக அவனுக்குப் பிரமை தட்டியது. அவன் விரல்கள் மூடி மூடித் திறந்தன. கண்கள் எங்கோ எதையோ வெறித்து நோக்கிக் கொண்டிருந்தன. பற்கள் உதட்டைக் கடித்து ரத்தத்தை ஈர்த்தன. ஆனால் கண்ணீர் மட்டும் ஒரு சொட்டுக் கூட கசியவில்லை!

சப்தர்ஜங் மருத்துவ மனையில் பரிசோதனை முடிந்து சாந்தியின் உடல் தலை முதல் கால்வரை முழுமையாக ஒரு வெண்மையான துணியினால் மூடப் பட்டிருந்தது. தனஞ்செயனின் விருப்பத்தை அறியுமுன்னர் அவள் சடலத்தைக் குடும்பத்தார் யாரும் பார்க்கக்கூட அனுமதிக்கலாகாது என்று உத்தர விட்டிருந்தார் பல்வந்த் சிங். இப்போதும் அவனிடம் சொன்னார்: ''சாந்தியை நீ பார்க்க வேண்டுமென்பதில்லை. முகம் மட்டும் தெரிகிறாற் போல் துணி சுற்றித் தகனக்கிரியைகளுக்குக் கொண்டு போய் விடலாம்.''

அவர் ஏன் அப்படி கூறுகிறார் என்பது அவனுக்குப் புரிந்தது. அவள் போராடியிருப்பாள். போராட்டத்தின் பயங்கரச் சின்னங்கள் அவள் பட்டு மேனியில் காணப்படும். கசக்கப்பட்ட ரோஜா இதழ்களைத் தான் பார்த்தே ஆக வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான் தனஞ்செயன். அப்போது தான் தனக்கு ரோஷம் அதிகமாகும். அந்தக் கயவனைக் கண்டுபிடித்துக்



தமிழகத்தில் வளம் கொழிக்க ஸிம்ஸன் கம்பெனி போன்ற பல தொழில் நிறுவனங்களை நடத்தி வரும் 'அமால்கமேஷன்ஸ்' ஸ்தாபனச் செயலாளர் திரு கே. ராமசாமி அவர்களின் புதல்வி செள. ராதாவுக்கும், பெங்களூர் ஸ்ரீ சுந்தரம் அய்யங்காரின் புதல்வர், கெஸ்ட் கீன் வில்லியம்ஸ் ஸ்தாபன என்ஜினீயர் சிரஞ்சீவி பிரகாஷுக்கும் ஜூன் 26-ந் தேதி சென்னை தியாகராயநகர் மீனாக்ஷி கல்யாண மண்டபத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. முதல் நாள் நிச்சயதார்த்த வைபவத்தில் உபயவேதாந்த மூக்கூர் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மாச்சாரியார் அவர்கள் சீதா கல்யாணப் பிரவசனம் செய்தார். திருமணத்துக்கும் மாலையில் நடைபெற்ற வரவேற்பு வைபவத்தில் எல். வைத்தியநாதன், டாக்டர் எல். சங்கர் இருவர் வயலினிசைக்கும் ஏராளமான நண்பர்களும், உறவினர்களும், தொழில் பிரமுகர்களும் வந்திருந்து சிறப்பித்தனர்.

வாழ்க மணமக்கள்



சென்னை, டியம் ஹவுஸ் சர்வீஸில் பணிபுரியும் ஸ்ரீ K. V. ராமஸ்வாமி அவர்கள் குமாரத்தி செள. மைதிலிக்கும், சீர்காழி R. வெங்கட்டராமய்யர் குமாரன் சிரஞ்சீவி V. சந்திரமௌளிக்கும் சென்னை ராணி அண்ணாதுரை கல்யாண மண்டபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கு ஏராளமான உறவினர்களும், நண்பர்களும், நகரப் பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்!



திருச்சி அகஸ்தி... ...தகசாலை, உரிமையாளர் ஸ்ரீ வி. சுப்ரமணியன் அவர்கள் குமாரத்தி செள. ஆனந்திக்கும் வேப்பத்தூர் ஸ்ரீ என். சுப்ரமணியன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி எஸ். நாராயணனுக்கும் (சென்னை ஸீமென்ஸ் இந்தியா லிட்.) ஸ்ரீரங்கத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# ஷேவர் ஸ்விஷ்ஷும்

## காவாலிபுரம் கொள்ளைக்காரர்களும்














**ஒவ்வொரு முறையும் அப்படித்தான்:**
**ஸ்விஷ் கொண்டு ஷேவ் செய்து கொள்பவரை**
**ஒருக்காலும் தோற்கடிக்க முடியாது.**

கொல்லுகிற வேகத் துடிப்பு அதிகரிக்கும்! அவரை விலகி இருக்கச் சொல்லி விட்டுத் துணியை மெல்ல மெல்ல விலக்கினான் தனஞ்செயன். இமைகள் கண்களுக்குக் கருணை காட்டி மூடிக் கொண்டு விடாமல் தடுத்தான். நெஞ்சம் பலவீனமடைந்து தன் தலையைத் திருப்பி விடக் கூடாதென்பதற்காக இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டான். பார்த்தான்.

மச்சம் மறு காண முடியாத பளிங்கு உடல் பாளம் பாளமாய்க் கீறல் கண்டு விகாரப்பட்டிருந்தது. ஆயினும் அரக்கனிடம் அகப்பட்ட அருமைத் தங்கை பட்டிருக்கக் கூடிய வேதனையின் ஒரு சிறு பாகத்தையே இந்தப் புறச் சின்னங்கள் தனக்கு உணர்த்துகின்றன என்பதை அவன் நினைவுபடுத்திக் கொண்டான்.

''மருத்துவப் பரிசோதனையில் ஏதாவது சாட்சியம் அகப்பட்டதா?'' என்று கேட்டான் தனஞ்செயன். குரல் உணர்ச்சியற்று வறண்டிருந்தது.

''ஒரு சிறு தடயம் அகப்பட்டது. அவன் தோல் கறுப்பு என்ற அளவுக்குப் புரிந்தது. சாந்தி போராடி அவனைப் பிறாண்டிய போது ரத்தத்துடன் அவன் தோலின் சிறு பகுதியும் வழண்டு வந்து அவள் வலக் கரத்தின் ஆள்காட்டி விரல் நகக் கணுவில் ஒட்டிக் கொண்டது. ஆனால் கறுப்புத் தோல் படைத்தவர்கள் டில்லியில் எத்தனையோ பேர் உண்டு. யாரை என்று...''

அவர் வாக்கியத்தை முடிக்கத் தனஞ்செயன் விடவில்லை. ''நீக்ரோ!'' என்றான்.

''என்ன சொன்னாய்?''

அவன் அமைதியாகப் போர்வையை இழுத்து மூடிவிட்டுத் தொடர்ந்தான்: ''அவன் நீக்ரோவாகத்தான் இருப்பான். நியூயார்க்கில் என் அறையைச் சோதனையிட்டவனாக இருக்கக் கூடும். அவன் முகத்தை நான் ஒரு கணம் பார்த்தேன். ஒரு நீக்ரோவுக்கும் மற்றொரு நீக்ரோவுக்கும் இடையில் அதிகமான முக வித்தியாசத்தை நம் போன்றவர்கள் சட்டென்று உணர்ந்து கொள்ள முடியாதுதான். ஆனால் வெறுப்பை உமிழும் அந்தக் கண்களை எங்கே எப்போது சந்தித்தாலும் நான் உடனே இனம் கண்டு கொள்வேன்!'' இயன்ற வரையில் அடையாளங்களைக் கூறினான் தனஞ்செயன். பிறகு தொடர்ந்து பேசினான்:

''என் அறையில் அவன் கள்ளத்தனமாகப் புகுந்த போது அவன் முகதரிசனம் எனக்குக் கிடைத்து விட்டபடியால் மீண்டும் அவனே ஹைஜாக் முயற்சியில் இறங்க முடியவில்லை. நான் அவனைப் பார்த்த மறுகணம் எச்சரிக்கை அடைந்து விடுவேன் என்பதால் வேறு இருவரை அனுப்பி வைத்திருக்கிறான். பால் ஸ்மித்தும் ஜாக் கார்ட்டரும் அவனுடைய உறவினர்களாகக் கூட இருக்கலாம். அவர்களை நான் வெற்றி கண்டு கொன்றும் விட்டேன். நீதிமன்றத்தில் என் மீது வழக்குத் தொடரவோ எனக்குத் தண்டனை பெற்றுத் தரவோ வாய்ப்பில்லாத காரணத்தால் அவர்களுக்காகப் பழி வாங்கும் நோக்கில் இங்கு வந்திருக்கிறான். நியூயார்க் ஹோட்டலில் என் அறையில் கிடைத்த ஏதேனும் ஒரு தடயம் அவனை நேராகப் புதுதில்லிக்கும் என் வீட்டுக்குமே கூட அழைத்து வந்திருக்கும். அல்லது பம்பாய் வந்து சேர்ந்த பின் படிப்படியாகத் துப்புத் துலக்கியும் என் இருப்பிடம் அறிந்திருக்கலாம். விமானப் பயணிகள் பட்டியலே அவனுக்கு உதவியிருக்கும். எவ்வாறாயினும் மறைந்திருந்து என்னைக் கண்காணித்திருக்கிறான். நேருக்கு நேர் என்னைச் சந்திக்கத் திராணியற்ற அந்தக் கோழை!'' தனஞ்செயன் பற்களை நறநறவென்று கடித்து விட்டு மேலும் தன் ஊகங்களைக் கூறுவான்: ''என்னைப் பழி வாங்கத் துடித்தவன் நான் என் தங்கையோடு வெளியே போய் வருவதைப் பார்த்திருப்பான். மறைந்திருந்து என்னைச் சுட்டுக் கொல்வதை விட என் தங்கையை மானபங்கப்படுத்தினால் எனக்கு அதிகமான மனத் துயரை அளிக்கலாம் என்று கணக்குப் போட்டிருப்பான். அச்சமயம் நான் இல்லி



★ ஆஸ்கார் ஒயில்ட் அமெரிக்காவில் பிரவேசித்த போது சுங்க அதிகாரிகள் அவரது சொத்துக்களைப் பிரகடனம் செய்யுமாறு கேட்க, அவர் பளிச்சென்று சொன்னார்: "நான் பிரகடனம் செய்யக்கூடிய ஒரே சொத்து என் மேதாவிலாசம்தான்."

இவரது இன்னொரு [illegible] : "பெற்றோரிடம் அன்பு செலுத்தத் தொடங்கும் குழந்தைகள் பிறகு வளர வளரப் பெற்றோர்களை எடை போடத் தொடங்குகின்றனர்; அதன்பின்னரும் சில சமயங்களில் பெற்றோரை மன்னித்தும் விடுகின்றனர்!"

-- ரா. கு.

---

யிலேயே இருந்தால் அவளை எளிதில் பிடித்து விடுவேன் என்பதையும் யோசித்துப் பார்த்திருக்கிறான். அதனால் நான் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வெளியூர் செல்லும் நாளை ஆவலோடு எதிர்பார்த்துக் காத்திருந்திருக்கிறான். எனது திருவனந்தபுரம் பயணம் அவனுக்கு வாய்ப்பாக அமைந்தது. சாந்தி ஃபிரெஞ்சு மொழி வகுப்புக்குப் போய் விட்டு இருட்டிய பிறகு தனியே வீடு திரும்புகையில்...''

தனஞ்செயன் காட்சித் தொடர்பு இங்கே அறுந்துபோக வாளாவிருந்தான்.

அவன் விட்ட இடத்தில் பற்றிக் கொண்டு பல்வந்த் சிங் பேசினார்: ''வாடகைக்கு எடுத்த அல்லது திருடிய கார் ஒன்றை அந்த நீக்ரோ தானே ஓட்டிக் கொண்டு வந்திருப்பான். அவளை அதில் கட்டாயப்படுத்தி ஏற்றிக் கொண்டு நகர்ப் புறத்துக்கு வெளியே ஜன சஞ்சாரமற்ற இடத்துக்குப் போய்.... தனஞ்செயன்! அவள் இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு உயிர் பிழைக்காமல் அவனால் கொலை செய்யப்பட்டு மாண்டு போனதே மேலல்லவா?''

''சாந்தி நாதியற்றுச் செத்துக் கிடந்தது உங்களுக்கு எப்படி, எப்போது தெரிய வந்தது?''

''அவள் இரவு வீடு திரும்பவில்லை என்றதும் உன் பெற்றோர் போலீஸில் புகார் செய்திருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் படுக்கப்போகுமுன்னர் ரேடியோ கண்ட்ரோல் அறையை ஃபோனில் கூப்பிட்டு முக்கியமான விஷயம் ஏதாவது உண்டா என்று விசாரிப்பது கமிஷனர் வழக்கம். அந்தப்படிக்கே அன்றும் நடந்து கொண்டபோது இந்தப் புகார் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறார். உன் தங்கை என்று புரிந்ததும் உடனே என்னுடன் தொடர்பு கொண்டு பேசினார். நம்முடைய இந்தத் தொழிலில்தான் நாம் எவ்வளவு முன்ஜாக்கிரதையாக இருந்தாலும் போதாதே. அதனால் சாந்தி அகப்பட்டதும் அவள் தன் பெற்றோரிடமோ அல்லது வேறு யாரிடமோ பேசுவதற்கு முன்னால் நான் அவளைச் சந்தித்து விடுவது நல்லது என்று கூறினேன். ஆனால் போலீசார் அவளைக் கண்டுபிடித்த போது நான் என்ன, யாருமே பேச முடியாத இடத்துக்கு அவள் போய் விட்டாள்!

''இருந்தாலும் போலீசார் தங்களுக்கு இடப்பட்டிருந்த உத்தரவுக்கிணங்க என்னைத்தான் முதலில் அழைத்துத் தகவல் சொன்னார்கள். அவள் மரணமடைந்ததற்கான காரணம் போலீஸ் டாக்டருக்கும் கமிஷனருக்கும் எனக்கும் தவிர வேறு யாருக்கும் தெரிய வராதபடி கவனித்துக் கொண்டேன். உன்னிடம் கூறுதிருக்க எனக்கு மனம் வரவில்லை. உன் பெற்றோர் அவள் விபத்தில் மாண்டதாக எண்ணியிருக்கிறார்கள். பிரேதப் பரிசோதனை முடிந்து விட்டாலும் நீ திருவனந்தபுரத்திலிருந்து திரும்பிவரும் வரை உடலைப் பனிக் கட்டிப் பெட்டியில் வைத்துக் காக்கும் பொறுப்பை நாங்கள் ஏற்றுள்ளதாக அவர்களிடம் கூறியிருக்கிறேன்.''

பல்வந்த் சிங் இப்படிக் கூறிக் கொண்டே தனஞ்செயனை நெருங்கி வந்து ஆறுதல் கூறும் முகமாகவும் மன்னிப்புக் கோரும் பாவனையிலும் தமது வருத்தத்தை உணர்த்தும் விதமாகவும் அவன் கரத்தைப் பற்றி அழுத்தினார்.

''எல்லா விமான நிலையங்களையும் எச்சரித்து வைக்கிறேன்'' என்றார். ''அப்படியொன்றும் அதிகமான நீக்ரோக்கள் இந்தியாவில் விமானப் பயணம் செய்யப் போவதில்லை. எளிதில் வளைத்துப் பிடித்து விடலாம் அந்தப் பாவியை!'' என்றவர், ''அதாவது அவன் இன்னும் அமெரிக்காவுக்குத் தப்பிச் செல்லாமலிருந்தால்'' என்றும் விசனத்துடன் சேர்த்துக் கொண்டார்.

பிறகு ஃபோனை எடுத்து டயல் செய்தவாறே பல்வந்த் சிங் துயரம் ததும்பப் பேசினார்: ''உன் பயணம் பற்றிய முழு விவரங்களையும் எனக்கு நீ சொல்லியிருந்தும் ஒரு நீக்ரோ இந்தக் காரியத்தைச் செய்திருக்கக் கூடும் என்று எனக்குச் சட்டென்று தோன்றாமல் போய் விட்டதே! தனஞ்செயன்! உன்னால் முடியுமானால் இந்த முட்டாளை மன்னித்து விடு ... ஹல்லோ! பல்வந்த் சிங் ஹியர்...''

அவர் உத்தரவுகளைப் பிறப்பித்து முடிந்ததும் தனஞ்செயன் கூறினான்:



## டெலிவிஷனில் பாரதப் பண்பாடு

"சிந்து வெளி நாகரிகம் முதல் இந்திரா காந்தி வரை" என்ற தலைப்பில் டெலிவிஷனுக்காக ஒரு நிகழ்ச்சியைத் தயாரிக்கிறார் திரு எஸ். கிருஷ்ணசாமி. இவர் காலஞ்சென்ற டைரக்டர் கே. சுப்பிரமணியத்தின் மகன். பாரத சரித்திரத்தையும் பண்பாட்டையும் தத்துவத்தையும் படம் பிடித்துக் காட்டும் டெலிவிஷன் நிகழ்ச்சியின் ஆரம்ப விழாவில் மத்திய செய்தி ஒலிபரப்பு மந்திரி குஜ்ரால் கலந்து கொண்டு கிருஷ்ணசாமியை வாழ்த்தினார்.

## நகரும் நாற்காலி

புல்லாந் தரையானாலும் சரி, நடைபாதையானாலும் சரி சுலபமாக இயங்கும் நகரும் நாற்காலி இது. மோட்டார் கார் பாட்டரியில் இயங்குவது. மறுபடியும் 'சார்ஜ்' ஏற்றுவதற்கு முன்னால் ஆறு மைல் தூரம் செல்லலாம். நடக்க முடியாமல் ஊனமுற்றோருக்கு இந்த நாற்காலி பெருதவி. பிரிட்டிஷ் தயாரிப்பு.





"நான் என் தங்கையிடம் கொண்டிருக்கும் அன்பு மெய்யானதாயிருந்தால் அவன் இன்னும் இந்த நாட்டை விட்டுப் போயிருக்க மாட்டான். ஒரே ஒரு விண்ணப்பம். நமது ஆட்கள் அவனைக் கண்டு பிடிக்கட்டும். ஆனால் கைது செய்யக் கூடாது. விமானமோ கப்பலோ ஏறாமல் தடுத்தால் போதும். உன் நாட்டிலேயே அவனை விரட்டி விட்டு விட்டு உங்களுக்குத் தகவல் தெரிவிக்கட்டும்; நீங்கள் வேட்டை நாயாக என்னைப் பாவித்து அவிழ்த்துவிடுங்கள்!"

அவன் மனத்தை, அதில் வளர்ந்துள்ள வன்மத்தைப் புரிந்து கொண்ட பல்வந்த் சிங் தயங்கினார். ஏதோ கூற வாயெடுத்தவர் தனஞ்செயனின் மன்றுகிற கண்களை, வேதனை மிகுந்த விழிகளை, வைராக்கியம் மிக்க நயனங்களைச் சந்தித்தார். திறந்த வாயை மூடி ஒரு நேர்கோடாக்கினார்.

அந்த மௌனத்தைச் சம்மதத்துக்கு அறிகுறியாகக் கொண்டான் தனஞ்செயன். "உங்கள் யோசனைப்படியே சாந்தியின் முகம் மட்டும் தெரிகிற மாதிரி துணியைச் சுற்றி உடலை என் குடும்பத்தாரிடம் ஒப்படைத்து விடலாம்" என்றான். "விபத்தில் சாலையோரமாகத் தூக்கி எறியப்பட்ட அவள் தேகம் சேதம் அடைந்திருப்பதால் துணியைப் பிரிக்க வேண்டாம் என்று கூறி விடுங்கள். மரணத்துக்குக் காரணமான வாகனத்தையும் டிரைவரையும் கண்டுபிடிக்கப் போலீசார் தீவிர முயற்சி செய்து வருவதாகச் சொல்லுங்கள். இன்னும் உண்மையை மறைக்க என்னென்ன பொய்களை உருவாக்க வேண்டுமோ செய்யுங்கள். தகனக் கிரியைகளை நான் அருகிலிருந்து கவனித்து விட்டு உங்களுடன் மீண்டும் தொடர்பு கொள்கிறேன்." இவ்வாறு கூறி அவரை விட்டுப் பிரிந்தான் தனஞ்செயன்.

தீ வளர்ந்து வளர்ந்து சாந்தியைப் புனிதப்படுத்திக் கொண்டிருந்த போதும் கூட அந்தத் தீயே வெள்ளித் திரையாக மாறியிருந்தது தனஞ்செயனுக்கு. அதில் கயமைக்கு எடுத்துக் காட்டான கரிய மனித மிருகம் ஒன்று தாய்மைக்கு எடுத்துக் காட்டான மிருதுவான வெள்ளை ரோஜா ஒன்றினைக் கசக்கி முகர்வதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சாந்தி அடைந்திருக்கக் கூடிய அதிர்ச்சி, பீதி, வெட்கம், துயரம், அவமானம், போராட்ட வெறி, உடல் - மன வேதனைகள் அத்தனையையும் அணுஅணுவாக அவனும் அனுபவித்தான்.

(தொடரும்)

# பொடி போடுவோர் பாதுகாப்புப் படை

**முகுந்தன்**

**ப**லராமன் தலைவிரி கோலமாக ஓடி வருவதைப் பார்த்தவுடனேயே நான் ஊகித்து விட்டேன், 'சரி, நமக்கு ஏதோ அவல் கிடைக்கப் போகிறது'' என்று.

என் எதிரிலிருந்த நாற்காலியில் 'பொத்' தென்று விழுந்தபடியே, ''சே! சுத்த மோசம்!'' என்றான் பலராமன்.

''ஆமாம்! சுத்த மோசம்தான்!'' என்று — விஷயம் என்னவென்று தெரியாமலே — ஒத்துப் பாடினேன் நான். இல்லாவிட்டால் அவல் கிடைக்காதே!

''அயோக்கியத்தனம்!''

''ஆமாம், அயோக்கியத்தனம்!''

''பகல் கொள்ளை!''

''ஆமாம்! பகல் கொள்ளையேதான்!''

''நான் எதைக் குறிப்பிடுகிறேன் என்று உனக்குப் புரிந்து விட்டதா அதற்குள்?''

''புரியவில்லைதான் ... ஆனால் நீ என்ன சொன்னாலும் அதை அப்படியே ஒப்புக்கொள்வது என்று தீர்மானித்து விட்டேன் ... நீ விஷயத்தைச் சொல்!''

''நம்மைக் கண்டாலே யாருக்கும் பிடிப்பதில்லை ... ஒரே பொறாமை ... வயிற்றெரிச்சல் ...''

''இரு, இரு ... 'நம்மை' என்று யாரைச் சொல்கிறாய்? உன்னை மட்டுமா? அல்லது என்னையும் சேர்த்தா?''

''என்னையும், என் போன்ற மற்றவர்களையும்தான்!''

''புரியவில்லையே!''



'' அதாம்பா — பொடி போடுகிற பழக்கமுள்ள ஆசாமிகளைத்தான் குறிப்பிடுகிறேன்!''

''உங்களைப் பார்த்துப் பொறாமைப்படுகிறார்களா? யார் அவர்கள்?''

'' பொடி போடாதவர்கள் தான்! ஏதோ அவனவன் தன் மூக்கிலே தானே போட்டுக் கொள்ளுகிறான் என்றில்லாமல் அறி

யாயமாய்ப் பொறுமைப் படுகிறுன்கள் !'' என்று சொல்லி விட்டு வெள்ளிப் பொடி டப்பியைத் திறந்து 'சர்'ரென்று ஒருமுறை பொடியை இழுத்து விட்டுக் கையை உதறினுர்.

''இதோ பார் பலராமா ... நீ சொல் வதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்...நீ இப்போ உன் மூக்கிலே மட்டும்தான் பொடி போட்டுக் கொண்டாயா? என் கண்ணிலே கூடப் போட்டு விட்டாயே!'' என்று கண் களைத் துடைத்துக் கொண்டேன்.

''இதைத்தான் வயிற்றெரிச்சல் என்கிறது. 'கண்ணிலே தூவி விட்டான்', 'தரையிலே சிந்தி விட்டான்', 'சட்டையிலே தெளித்து விட்டான்' என்பதெல்லாம் பொடி போடு கிறவர்களாகிய எங்களைக் கண்டு மனம் பொருமுகிற ஆசாமிகளின் வெற்றுக் குற்றச் சாட்டுகள்! இது எங்களுக்கு இழைக்கப் படும் அநீதியாகும்!''

''ஓகோ!''

''அதுமட்டுமா! ... மற்றவர்கள் எங்களை எப்படி யெல்லாம் சுரண்டுகிறுர்கள் என்பது தெரியுமா உனக்கு?''

''தெரியாதே!''

''முன்பெல்லாம் பத்துப் பைசாவுக்கு இந்த டப்பா நிறையப் பொடி கிடைக்கும் ... இப்போது அதே பொடியின் விலை மூப்பது பைசா!...கட்டுப்படியாகுமா, நீயே சொல்!''

''கட்டுப்படியாகாதென்ருல் பொடிப் பழக் கத்தை விட்டுவிட வேண்டியதுதானே?''

''அது எப்படி முடியும்...? அது துரோக மில்லையா?''

''யாருக்குத் துரோகம்?''

''மூக்குக்குத்தான்! ... கண்ணுக்குக் கண் ணுடி போடுகிறேம்; காதுக்குக் கடுக்கன் போடுகிறேம்; வாய்க்கு வெறும் பாக்கோ வெற்றிலைப் பாக்கோ போடுகிறேம் ... மூக் குக்கு மட்டும் பொடி, இடி எதுவும் போடா விட்டால் இது துரோகமாகாதா?''

''சபாஷ்! பலரமா! அற்புதமான விளக்கம்! நீ அரசியல் மேடைப் பேச்சாளனுகப் போய் இருக்க வேண்டியவன்!...''

''கேள் இதை: இருக்கிற புகையிலையெல் லாம் நாசமாய்ப் போன சிகரெட், சுருட்டுத் தயாரிப்புக்குப் போய் விடுவதால் பொடித் தயாரிப்புக்குச் சரிவரக் கிடைப்பதில்லை யாம்...''

''அப்படியா?''

''நெய்யின் விலை நாளுக்கு நாள் ஏறிக் கொண்டிருப்பதும் உனக்குத் தெரியும்..''

''தெரியும்..''

''இதனுலெல்லாம் பொடித் தயாரிப்பு கணிசமாகக் குறைந்து விட்டதாம். எனவே, விலையை ஏற்றி விட்டார்களாம்.!''

''ஓகோ!''

''அட, கொடுக்கிற காசுக்கு அசல் பொடி யாவது கிடைக்கிறதா வென்ருல் அதுவும் கிடையாது .. கரிப்பொடி, உமிப்பொடி, சீயக்காய்ப் பொடி — இப்படிக் கலப்படம் வேறு...''

''அடடே...''

''எனவே இம்மாதிரியான அநீதிகளையும், அக்கிரமங்களையும் எதிர்த்துப் போராடு வதென்று தீர்மானித்து விட்டேன்!...''

''என்ன! போராட்டமா?''

''ஆமாம்!... கையிலே சில்லறை இல்லாத போது ஒரு சிமிட்டா ஓசிப் பொடிக்காகக் கையை நீட்டும் போது வெறும் சுரண்டி விரல் உள்ளங்கையில் தட்டுகிறுர்களே சில கடைக்காரர்கள், அதையும் எதிர்க்கப் போகி றேன்!...''

''நீ மட்டும் தனியாகவா போராடப் போகிறுய்?...''

''தக்க பலம் சேர்த்துக் கொண்டுதான் புறப்பட்டிருக்கிறேன் .. நம்ம கோடி வீட்டுக் குப்புசாமித் தாத்தாதான் எங்கள் தலைவர்! அப்புறம் நம்ம 'மங்கள விலாஸ்' பட்டாபி தான் பொருளாளர்! நான் செயலாளர் !''

''பேஷ்! பேஷ்!''



''எங்கள் போராட்டத்துக்காக ஓர் அமைப்பையும் உருவாக்கியிருக்கிறோம்!...''.

''வெரிகுட்! பெயர் என்ன?''

''பொபோபாப!''

''பலராமா! என்ன ஆயிற்று உனக்குத் திடீரென்று?..... ஊமையாகி விட்டாயா என்ன? ஏன் இப்படி உளறுகிறாய்?...''

''இல்லையப்பா ... அந்த அமைப்பின் பெயர் அதுதான் .. அதாவது 'பொடி போடுவோர் பாதுகாப்புப் படை!' ..... பெயர் எப்படி?''

''ரொம்பப் பிரமாதம்!.. அது சரி, பொடிக்கும் எனக்கும் மூக்குப் பிராப்தியே கிடையாதே! அப்படியிருக்க என்னைக் கேடி வந்து நீ இதையெல்லாம் சொல்வானேன்?''

''நீதான் எங்கள் அமைப்பின் முதல் கூட்டத்துக்கு அழைப்பிதழ் எழுதித் தர வேண்டும்! எனக்குப் பெரிய 'ற', சின்ன 'ர' வித்தியாசம் அவ்வளவாகத் தெரியாது!'' என்று விஷயத்துக்கு வந்தான் பலராமன்.

''பொபோபாப'' விரைவிலே துவக்கப்பட்டு விட்டது. அதன் முதல் கூட்டத்துக்கு — விசேஷ அழைப்பின் பேரில் — நானும் சென்றிருந்தேன். வந்திருந்தவர்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர் ரொம்ப காலமாகப் பொடி போடுகிறவர்கள் என்பது அவர்களது மூக்கு அமைப்பிலிருந்தே தெரிய வந்தது. நான் மட்டும் ஒரு கேலிச் சித்திரக்காரராக இருந்திருந்தால்

## பணவீக்கத்துக்குச் சாவு மணி!

பணவீக்கப் பகையை மாய்ப்பவர் யார் ?
" நானே " என்பாள் பாரதமாதா.
" நாட்டினர் சார்பில் சொல்லுகிறேன்!
உறுதியுடன் உழைப்போம்.
உட்பகையை அழிப்போம்."

பகையை முதலில் தாக்குவோர் யாரோ ?
" நானே " என்பார் தொழிலதிபர்.
" பொருள் விலை தாழ வைத்திருப்பேன்;
சேரும் லாபம் குறைத்திருப்பேன்.
நானே முதலில் தாக்குவேன்."

மாய்ந்ததா பகை எனப் பார்ப்பதும் யாரோ?
" நானே " என்பாள் வீட்டரசி.
" தேவையற்ற பொருள்களையெல்லாம்
சேர்க்கவே மாட்டேன்; அது மடியும்!"

சாவு மணியினை அடிப்பதும் யாரோ ?
" நானே " என்பான் தொழிலாளி.
" விற்பனை பெருக உற்பத்தி பெருக்கி
ஊதிய உயர்வைக் கோராதிருப்பேன்.
பணவீக்கப் பகைக்கு இதே சாவுமணி!"

துக்கம் காப்பவர் எவரேனும் உண்டோ ?
" நானே" என்பான் பதுக்கல்காரன்.
" பண்டம் எதுவும் பதுக்கிடாமல்
பரவலாய்விட்டால் துக்கம்காப்போம்."

சவக்குழிப் பணியை ஏற்பவர் யாரோ ?
" நாம், நாம் " என்பார் நாட்டின் மக்கள்.
" உழைப்போம், உழைப்போம், சேமிப்போம்.
ஒன்றாய்ச் சேர்வோம். ஆழத் தோண்டுவோம்
வென்ற பகைக்குச் சவக்குழியாம்!"

தழுவல்: அ. ஆசீர்வாதம்



அகம் மகிழ அணியும் சுகத்திற்கு

லக்ஷ்மியின்

# பாவரீனா

வாயில் புடவைகள்

அன்றாடம் உடுப்பதற்கும்
எல்லா விசேஷ சந்தர்ப்பங்களுக்கும்
உகந்த துணி. கவர்ச்சியான அணி.
இலேசானது சுருங்காதது.
நேர்த்தி மிக்க டிசைன்கள்.
பாவரீனா வாயில்கள் மேம்பட்டது
இறக்குமதி செய்த
90s & 100s உயர்தர
பருத்தியினால்
நெய்யப்பட்டவை.



தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயம்புத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

VSK.LMC-BAL.658.TM.

மூன்று நோட்டுப் புத்தகங்கள் 'ஸ்கெட்ச்' பண்ணியிருப்பேன்.

இந்த அமைப்பின் தொடக்க விழாவுக்குத் தலைமை தாங்கத் தமிழக முதல்வரையே அழைத்தார்களாம். அவர் தாம் இதில் பங்கெடுத்துக் கொண்டால் பொடி போடாதவர்களிடம் பாரபட்சமாக நடந்துகொண்டதாகக் கருதப்படலாம் என்பதால் கழன்றுகொண்டாராம். ஆனால் அவருக்கு பொ.போ.பா.ப. விடம் தனியானதோர் அபிமானம் உண்டென்று அந்தரங்கமாகத் தெரிய வந்ததெனப் பலராமன் குறிப்பிட்டான். அதற்குக் காரணம் இல்லாமல் போய்விடவில்லை. பொடியருகிய அவரை அரசியலுக்கு அழைத்துப் படிப்படியாக உயர்த்தி விட்ட அவரது தானைத் தலைவன், இதய மன்னன்–பேரறிஞர் அப்பண்ணாவுக்குப் பொடியென்றால் உயிராம்.

குடியை ஒழித்திட்ட இந்த அரசு பொடியைக் காக்க எல்லாம் செய்யும் என்று முதல்வர் பலராமனிடம் தனியிடத்தில் தெரிவித்த போதிலும் நேரடியாக மகாநாட்டில் கலந்து கொள்ளவில்லை. பொடி போடுவோர் தமது கருத்துக்களை வெளியிட்டு ஊர்வலம் நடத்த விரும்பினால் அதற்கு அவர்களுக்கு உரிமை உண்டு என்று மட்டும் அவர் பத்திரிகைகளுக்கு அறிக்கை விட்டு விட்டார். மகாநாடு முடிந்து 'பொடி போடாதவர் ஆதிக்கம் ஒழிக' என்ற கோஷங்களுடன் நடக்கும் ஊர்வலத்தின்போது, பொடி போடாதவர் மீது ஏதாவது தாக்குதல் நடக்குமானால் கண்டுக்காமல் இருந்து விடவும் பலத்த போலீஸ் ஏற்பாடுகள் செய்து விட்டார்.

இதையெல்லாம் பலராமன் சொல்லிச் சொல்லி மகிழ்ந்து முதல்வரை துதி பாடினான்.

மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அதில் முக்கியமானது என்னவென்றால் பொடி போடுவோருக்கு இருக்கக் கூடிய சுறுசுறுப்பும் சிந்தனை வேகமும் பொடி போடாதவருக்கு இருக்க முடியாதாகையால் பொடி போடுவோருக்கே மாநிலத்தில் எண்பது சத விகிதம் வேலை வாய்ப்புக்கள் ஒதுக்கப்பட வேண்டும்!

கடைசியாக ஒரு முக்கிய முடிவும் எடுக்கப்பட்டது. உறுப்பினர்களுக்குப் பொடி மலிவாகக் கிடைப்பதற்கான முயற்சிகளைப் பொருளாளரான 'மங்கள விலாஸ்' பட்டாபி ஏற்றுக் கொள்ளப் போவதாகவும், அவருடைய ஹோட்டலில் எப்போதும் தரமான பொடி (உறுப்பினர்களுக்கு மட்டும்) கிடைக்கும் என்றும் அறிவிக்கப்பட்டது.

வந்திருந்தவர்கள் எல்லோருக்கும் ஓர் அழகிய — பெரிய — கைக்குட்டை இனாமாகக் கொடுக்கப்பட்டது. அதை நான் மடித்துக் கொண்டிருக்கும்போது பலராமன் என்னிடம் வந்தான். ''எப்படி எங்கள் தீர்மானங்கள் எல்லாம்?'' என்று கேட்டான்.

''ரொம்பப் பிரமாதம்! காரம், குணம், மணம் மிக்க தீர்மானங்கள்! பொடி விஷயத்தை இப்படித்தான் இடித்து, அடித்துச் சொல்ல வேண்டும்! எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது!'' என்று சொன்னேன்.

**மூ**ன்று மாத காலத்துக்குப் பிறகு ஒரு நாள் சைனாபஜார் நடைபாதைக் கைக்குட்டை வியாபாரி ஒருவனுடன் நான் பேரம் பேசிக் கொண்டு நின்றபோது எதிர்பாராத விதமாகப் பலராமனைச் சந்தித்தேன்.

''என்னப்பா! உன் 'பொபோபாப' வெல்லாம் எந்தமட்டில் இருக்கிறது?''

'' 'பொபோபாப'வுக்கு நான் தலைமுழுகியாகி விட்டது!''

''மூக்கு முழுகியாகி விட்டது என்று சொல்! ... ஏன், என்ன சமாசாரம்?''

''பேப்பரில் பார்த்திருப்பாயே, 'மங்கள விலாஸ் ஹோட்டல் இழுத்து மூடப்பட்டது' என்று?...''

''ஆமாம்...ஏதோ சுகாதார இன்ஸ்பெக்டர் அந்த ஹோட்டல் மீது வழக்குப் போடப் போவதாகச் செய்தி வந்திருந்தது...''

''எல்லாம் அந்த முட்டாள் பட்டாபி செய்த கோளாறினால் வந்த வினை [illegible] ஹோட்டல் [illegible] கொண்டுதா. அவனும் கம்பி எண்ண[illegible]''

''என்ன நடந்தது? விவரமாகச் சொல்!''

''எங்கள் உறுப்பினர்களுக்காக அவன் ஹோட்டலில் மலிவு விலையில் பொடி கிடைக்கும் என்று அறிவித்தோமல்லவா?...''

''ஆமாம் ... அது சரியாக நடக்கவில்லையா?''

''ஒழுங்காகத்தான் நடந்தது .... அந்த ஹோட்டலிலே ஒரு சரக்கு மாஸ்டர் ... அவரும் பொடி போடுகிறவர் ... ஆனால் எங்கள் 'பொ போ பா ப' உறுப்பினர் இல்லை...அவர் ஒருநாள் ஓசிப் பொடி கேட்டாராம்...பட்டாபி மறுத்து விட்டானாம்...''

''உம் அப்புறம்?...''

''அந்தச் சரக்குமாஸ்டர் இந்த ஆத்திரத்தை மனசிலே வைத்துக் கொண்டு ஒரு நாள் சாம்பார், ரசம், கறி, கூட்டு எல்லாவற்றிலும் மிளகாய்ப் பொடிக்குப் பதிலாக மூக்குப் பொடியை எக்கச்சக்கமாய் அள்ளிப் போட்டு விட்டார்... 'புட் பாய்ஸனிங் கேஸ்' நிறையப் பேருக்குக் குடல் கெட்டுவிட்டது!''

''அட கண்றாவியே!''

''ஹோட்டல் முழுகி விட்டது! ...நானும் ''பொபோபாபவை விட்டு விட்டேன்!...''

''ஹோட்டல் முழுகி விட்டது என்றால் பட்டாபி வேண்டுமானால் பொபோபாபவை விட்டும் ... நீ எதற்காக விட வேண்டும்?''

''சுத்த மரமண்டை நீ! எதையு[illegible] கத் தெரியாது உனக்கு!...அ[illegible] மாஸ்டர் வேறு யாருமி[illegible] மச்சினன்!''

''அடடே? அது எனக்குத் தோன்றவே இல்லையே!'' என்றவன் சட்டைப் பையைத் துழாவி, பொடி டப்பியை எடுத்து [illegible] ரென்று ஓர் இழுப்பு இழுத்தவ[illegible]

[illegible] எனக்கு எப்போது முதல் [illegible]

[illegible] கொடுத்திர[illegible] [illegible]தருதான்...''

[illegible] பாப'வுக்கு நான் செயலாளனாகப் போகலாமா என்று பார்க்கிறேன், நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

# கடவுள் மாமா

[மர்மக் கதையாம்! படத்தில் மர்மத்தையும் காணோம்: கதையையும் காணோம்!]

குழந்தைகள் கதை மாதிரி ஆரம்பித்துப் பெரியவர்களுக்கு ஏற்ற கதையாக இடையில் மாறிவிடுகிறது. ஆகவே, குழந்தை நட்சத்திரம் மிகவும் பெரியவள் போல் கோர்ட்டில் சாட்சி சொல்லும் அளவுக்கு முதிர்ச்சி பெற்றுப் பேசுவது அதிசயமோ, தவறோ இல்லை தானே! புதுமை செய்வதாக நினைத்துக் கொண்டு என்னத்தையெல்லாமோ கற்பனை செய்து திரைக் கதையில் சேர்த்து அதைச் சோதனைக்குள்ளாக்கி விடுகிறார்கள். இதில் ஒரு வேதனை என்னவென்றால், இவர்கள் செய்திருக்கும் அசட்டுப் 'புதுமை'களைத் தமிழ்ப்பட ரசிகர்கள் ரசிக்க வேண்டுமாம்! படம் ஓடாவிட்டால், ரசிகர்கள் மீது குறையைத் தூக்கிப் போட்டு, ''நம் தமிழ்ப்பட ரசிகர்களைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை! புதுமையை வரவேற்க மாட்டேன் என்கிறார்களே!'' என்று விசனப்படுகிறார்கள். பத்மினி பிக்சர்ஸாரின் இப்படத்தில் முத்துராமன் 'கடவுள் மாமா'! குழந்தை உமா, சிறையிலிருந்து தப்பி வந்த ஆயுள் கைதி கந்தனுக்கு வைத்த பெயர் அது. தன் தந்தையைத் தன்னிடம் சேர்க்க யாரும் உதவமாட்டார்களா என்று மாதாகோவிலில் முறையிட்டுவிட்டு வந்த குழந்தை உமாவுக்குக் கடவுளால் அனுப்பப்பட்ட மாமா.

வில்லனின் கொடுமை, ஒரே தோற்றமுள்ள இருவரால் விளையும் குழப்பம், 'டிஷ்யூம், டிஷ்யூம்' சண்டை, குடிகார ஜமீந்தார், இரு பெண்களில் ஒருத்தி சாவு—உளுத்துப் போன பழைய குப்பை, கூளங்களை வைத்துக் கொண்டு படம் பார்ப்பவர்களை நன்றாய் ஏமாற்ற முயன்றிருக்கிறார்கள்!

முத்துராமன் அருமையாக நடித்திருக்கிறார். கைதியாக இருந்ததிலிருந்து கடைசி வரையில் தம் பாத்திரத்தை உணர்ந்து நடித்துப் படத்துக்குப் பிராணவாயு அளித்திருக்கிறார்!

ஜெயசித்ராவுக்குத் திருடி ரோல்! விசில் அடித்துப் போரிட்டு.... கும்கும் குத்துச் சண்டையில் ஆண் மகன் கெட்டான் போங்கள்! கந்தனோடு தோழமை கொள்ளும் நேரத்திலும் அவனிடம் நெகிழ்ந்து போகும் சந்தர்ப்பங்களிலும் ஜெயசித்ராவின் நடிப்பில் காணும் நளினம் நன்றாயிருக்கிறது. ஆனால், குழந்தை உமாவை வைத்துக் கொண்டு கந்தனும், கண்ணம்மாவும் கட்டிப் பிடித்துக் கொள்வதும், கண்ணடித்துக் காதல் புரிவதும் ரொம்ப விரசம்! படத்துக்கு சென்ஸார் என்று ஒன்று நடந்ததா? குழந்தை உமாவுக்கு 'மேற்படி' விஷயங்கள் புரிந்திருப்பது போல் காட்டுவது என்ன புதுமையோ, என்ன உத்தியோ! கண்றாவி!

குமாரி பத்மினிக்குக் கண்ணீர் விட்டுக் கலங்கி உயிரைவிடும் பாத்திரம். நன்றாய் நடித்திருக்கிறார். மனோரமா, தேங்காய் சீனிவாசன் காமெடி, 'கடவுள் மாமா'வுக்குக் கடவுளின் வரப் பிரசாதமாக அமைந்திருக்கிறது. மருதகாசியின் ''முத்தழகு'' என்ற பாட்டு மனோரமா, ஏ.எல். ராகவன் குரலில் இனிமையாயிருக்கிறது.

பேபி இந்திரா மிகவும் சூடிகை. கணீரென்று வசனங்களைப் பேசுகிறாள். அதற்காக அந்தக் குழந்தையைப் பாராட்ட வேண்டியது தான். அவள் அதிகப்பிரசங்கித்தனம் செய்திருப்பது அவள் குற்றமில்லையே! —காந்தன்



# பொழுது போக்கு

பி.எஸ்.எம்.

காய்கறிகளின் விலைவாசி ஏறுவதைக் கண்டு பொறுமிய வீட்டுக்காரர்: உன்னிடம் கறிகாய் வாங்கவே மாட்டேன். இனிமேல் வீட்டிலே தோட்டம் போட்டுக் கறிகாய் பயிரிட்டுக் கொள்கிறேன்!

''ரொம்ப நல்லது!'' என்றான் கறிகாய் வண்டிக்காரன். ''அப்பத்தான் நான் எவ்வளவு மலிவாகக் கறிகாய் கொடுத்திருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும்!''



## சிந்தனைக்கு ஒரு மூலை!

ஓர் எண்ணத்தை விதைத்து வை. உடனே ஒரு செயல் பரிணமிக்கும். ஒரு செயலை விதைத்தால் ஒரு பழக்கத்தை அறுவடை செய்யலாம். பழக்கத்தை விதைத்தால் குணத்தைப் பெறலாம். குணத்தை விதைத்தால், விதியை வெல்லலாம்!

## க்விஸ்!

1. கோமகன் கிட்ச்னர். 2. பீல்ட் மார்ஷல் ஸ்மட்ஸ். 3. ஜெனரல் மார்ஷல். 4. ஜெனரல் மெக் ஆர்தர். 5. வேவல். 6. மாண்ட் கோமரி. 7. ஜெனரல் டிகால். 8. ஐஸன்ஹோவர். 9. மார்ஷல் டிட்டோ. 10. மௌண்ட்பாட்டன்.

இவர்கள் தளபதிகள். எந்த நாட்டுத் தளபதிகள்? இவர்கள் கலந்துகொண்ட போர்களைப்பற்றிச் சொல்லத் தெரியுமா? 'போர்' என்கிறீர்களா? கேள்வியே 'போர்' பற்றித்தானே?

முதல் உலகப் போருக்குப் பிறகு ஐரோப்பாவில் அதிகளவு பூமியை இழந்த நாடு எது?

1. ஆஸ்திரியா — ஹங்கேரி, 2. ஜெர்மனி, 3. ரஷ்யா, 4. துருக்கி, 5. செர்பியா.

பழங்கால உலகின் கலைத் தலைநகராக ஏதென்ஸுக்குப் பிறகு பெருமை பெற்ற நகரம் எது?

1. அலெக்சாந்திரியா, 2. ஜெருசலம், 3. ரோம், 4. ஸ்பார்ட்டா, 5. பைஸாந்தியம்.

(விடைகள் எதிர்ப் பக்கத்தில்)

விரைவில் நகரசபைத் தேர்தல்கள் நடக்கவிருக்கின்றன. மூன்று கட்சி அபேட்சகர்களும் சென்னை நகரசபைக்குப் போக வழி தெரியாமல் திண்டாடுகிறார்கள். வாக்காளர்களாகிய உங்களை வழி காட்டி அழைத்துச் செல்லச் சொல்கிறார்கள்! உங்களுக்கு விருப்பமான அபேட்சகரைச் சரியான வழியில் நகரசபைக்கு அழைத்துச் செல்லுங்கள், பார்க்கலாம்!



## வரி விழுங்கும் வாஷிங்டனா?

அமெரிக்க நாடாளுமன்றப் பிரமுகர் தம் தேர்தல் பிரசாரத்துக்காக அந்தச் சிறு நகரத்துக்கு வந்து ஒரு விருந்து வைத்தார். அந்த விருந்துக்கு ஒரு விவசாயியும் வந்திருந்தார். அவர் நேரே அந்த அரசியல் பிரமுகரிடம் போய், "இந்த நகரத்தில் நீங்கள் புதிய மனிதராக இருக்கிறீர்களே?" என்றார்.

"ஆமாம்" என்றார் அந்தப் பிரமுகர்.

"எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டார் விவசாயி.

"வாஷிங்டனிலிருந்து!" என்று பதில் வந்தது.

"வாஷிங்டனா? எந்த வாஷிங்டன்? வரி விழுங்கும் வாஷிங்டனா? அல்லது வரி விதிக்கும் வாஷிங்டனா?"

* * *

ஒரு மோட்டாரோட்டி பாதையில் குறுக்கே வந்த ஒரு கன்றுக்குட்டியை மோதித் தள்ளிவிட்டார். அவர் உடனே காரை நிறுத்திவிட்டு அடுத்துள்ள பண்ணைக்குச் சென்று விபத்தினை விளக்கினார். பிறகு கன்றின் சொந்தக்காரரான விவசாயியிடம், "இந்தக் கன்று எவ்வளவு விலை பெறும்?" என்று கேட்டார்!

"அந்தக் கன்று இப்பொழுது முப்பத்தைந்து டாலர் பெறும். ஆனால் இன்னும் ஆறு வருஷங்களில் அதுவே இருநூற்றைம்பது டாலர் பெறும்!"

மோட்டார் ஓட்டி உடனே தம் செக் புத்தகத்தை எடுத்து ஒரு செக்கை எழுதி விவசாயியிடம் கொடுத்தார்.

அதைப் பார்த்த விவசாயிக்குத் தூக்கி வாரிப் போட்டது. இருநூற்றைம்பது டாலருக்குத்தான் செக் கொடுத்திருந்தார். ஆனால் அதை ஆறு வருஷங்களுக்குப் பிறகுதான் காசாக்க முடியும்!

உபாத்தியாயர் கேட்டார்: "கடவுள் செய்ய முடியாத காரியம் ஒன்று உண்டா?"

"உண்டு, ஸார்!"

"கடவுள் செய்ய முடியாததும் உண்டா, யோசித்துச் சொல்லு!"

"நிச்சயமாக உண்டு ஸார்! அவரால் எல்லாரையும் திருப்திப்படுத்த முடியாது!"



### க்விஸ்! - விடை

கோமகன் கிட்ச்னர் பிரிட்டிஷ்காரர்: போயர் போர்.

பீல்ட் மார்ஷல் ஸ்மட்ஸ் - தென் ஆப்பிரிக்கர்: போயரோடு போரிட்டவர், உலகப் போரில் பிரிட்டிஷ் படைக்குத் தலைமை தாங்கியவர்.

ஜெனரல் மார்ஷல் - அமெரிக்கர்: இரண்டாம் உலகப் போரில் அமெரிக்க முப்படைத் தளபதி.

ஜெனரல் மெக் ஆர்தர் - அமெரிக்கர்: ஜப்பானியரை இரண்டாம் உலகப் போரில் வெற்றி கண்ட தளபதி.

வேவல் - பிரிட்டிஷ்காரர்: இரண்டாம் உலகப் போரில் இத்தாலியர்களை வென்ற தளபதி.

மாண்ட் கோமரி - பிரிட்டிஷ்காரர்: நார்மண்டியில் ரோமலைத் தோற்கடித்தவர்.

ஜெனரல் டிகால் - இரண்டாம் உலகப் போரில் பிரெஞ்சுத் தளபதி.

ஐஸன் ஹோவர் - அமெரிக்கர்: ஜெர்மனியைத் தோற்கடித்த அமெரிக்கத் தளபதி.

மார்ஷல் டிட்டோ - யுகோஸ்லாவியர்: இரண்டாம் உலகப் போரில் யுகோஸ்லாவியப் படைக்குத் தலைமை தாங்கிய தளபதி.

மௌண்ட்பாட்டன் - பிரிட்டிஷ்காரர்: ஜப்பானியர்களிடமிருந்து பர்மாவை மறுபடியும் பிடுங்கிக் கொண்ட தளபதி.

---

விடை: ஆல்ஜிரியா, ஹங்கேரி

விடை: அலெக்ஸாந்திரியா.

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

அன்றைய குஜராத்தி மரபினைப் பின்பற்றி சேலை அணியும் பாணி இன்று மீண்டும் மங்கையரிடையே உலவத் தொடங்கி உள்ளது. அதுவும் அணிந்திடும் சேலை மபத்லாலின் 'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலையாக இருக்குமே எனில், அழகு முழுமை பெற்று முறுவலிக்கிறது!

'மெஃப்ரின்' பாலியெஸ்டர் சேலைகள் பண்டைய கற்பனைகளுக்கு, நவீன ஒளியோடு கூடிய வண்ணம், வடிவம் மற்றும் நெசவின் நேர்த்தியை கலந்திழைத்து, கிளர்ச்சியூட்டும் மறுமலர்ச்சியை அளிக்கின்றன!



**மபத்லால் க்ரூப்** அளிக்கும்
**நேர்த்தியான துணிமணிகள்**
*மெஃப்ரின்*
பாலியெஸ்டர் சேலைகள் மற்றும்
உடுப்புத் துணிகள்

AIYARS-M. 384 TM

ஜமஜழ் மகளிர்

# ஆண்குலமே அழு!

ஜீதா

"இந்தக் காலத்துப் பெண்கள் கண்ணுக்கு எங்கே மையிட்டுக் கொள்கிருர்கள்? மஞ்சள் பூசி எங்கே குளிக்கிருர்கள்? எல்லாம் கறுதலையாகப் போய்விட்டதுகள்!" என்ருள் அகிலாண்டம்மாள்.

"பெண்கள் பூசிக் கொள்ளா விட்டால் என்ன மாமி குறைஞ்சு போச்சு? இப்ப எல்லாம் ஆண்கள் கண்ணுக்கு மையிட்டுக் கொள்வதும் உதட்டுக்குச் சாயம் பூசிக்கொள்வதும்தான் ஃபாஷன்!" என்ருள் ஹேமா.

"இதென்ன கூத்து!" என்ருள் அன்னபூரணியம்மாள்.

"எல்லாம் அமெரிக்காவில்தான்! பையன்கள் கண்களுக்கு மையிட்டுக் கொள்வதாகவும், உதட்டுக்கு லிப்ஸ்டிக் போட்டுக் கொள்வதாகவும் விளம்பரம் பார்த்து முதலில், இவற்றை வியாபாரம் செய்யும் கம்பெனிகள் அவற்றின் வியாபாரத்தைப் பெருக்கத்தான் இம்மாதிரி ஸ்டண்ட் அடிக்கிருர்களாக்கும் என்று நினைத்தார்களாம். கடைசியில் பார்த்தால் இது புருஷப் பசங்களிடம் வளர்ந்து வரும் புது 'பாஷன்' என்று தெரிய வந்ததாம்!" என்று சாரு சற்று சாங்கோபாங்கமாக விளக்கிஞள். "'பெண்களுக்கு மட்டும் தான் அலங்காரங்களா? ஆண்களும் 'மேக் அப்' செய்து கொண்டால் என்ன?' என்று சம உரிமை பேசுகிருர்களாம்!"

"இதோடு நின்றது என்கிறீர்களா? 'உமன்ஸ் லிப்' என அமர்க்களப்பட்ட மகளிர் விடுதலை இயக்கம் தோன்றிய அமெரிக்காவில் இன்று ஆண்கள் விடுதலை இயக்கம் அட்டகாசம் பண்ணுகிறது! இதில் வேடிக்கையான நிகழ்ச்சிகள் எவ்வளவோ! பெண்களின் மெட்டர்னிடி லீவுக்குச் சமமாக ஆண்களுக்கு பெட்டர்னிடி லீவு கேட்கத் தொடங்கியிருக்கிருர்கள்!" என்ருள் ஹேமா.

"ஏரேயப்பா இங்கிலீஷ் வார்த்தைகளைப் போட்டுப் பேசி மலைக்க வைக்கிறயே?" என்ருள் அன்னபூரணியம்மாள்.

"இந்தக் காலத்துப் பெண்கள் ஆபீசுக்குப் போறதுகளோ இல்லியோ! அவர்கள் உண்டாகிப் பிரசவ காலம் நெருங்கிவிட்டால் பிரசவத்துக்கு முன்னேயும் பின்னேயும் இரண்டு மூன்று மாதம் லீவ் கொடுப்பா. அதற்கு 'மெட்டர்னிடி லீவ்' என்று பேரு. அதற்குச் சமமாக ஆண்களும் தங்களுக்கு 'பெட்டர்னிடி லீவ்' கேட்கிருளாம்!" என்ருள் சுந்தர்.

"புருஷாளுக்கு எதற்கு லீவாம்?" என்ருள் அன்னபூரணியம்மாள்.

"புருஷா அவரவர் மனைவி கர்ப்பமாகி பிரசவிக்கிறப்போ அவர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டும். குழந்தை பிறந்த பிறகும் அதைக் கவனித்துக் கொள்வதில் உதவி செய்ய வேண்டும். இதற்காகப் பெண்களுக்குச் சமமாக ஆண்களும் லீவு கேட்கிருர்கள்!" என்ருள் சாரு.

"இதுவரை அமெரிக்காவில் டெலிபோன் ஆப்பரேட்டர் வேலை என்றால் பெண்களுக்கு மட்டும்தான் என்றிருந்தது. இப்போது, ஆண்கள் விடுதலை இயக்கத்தினர் சண்டை போட்டுப் பத்துச் சதவிகித உத்தியோகங்கள் ஆண்களுக்கு ஒதுக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்து கொண்டிருக்கிருர்கள்" என்ருள் ஹேமா.

"அதே மாதிரி விமான உபசரிணைப் பெண் என்ன, விமான உபசரிணை ஆண்கூட இருக்கலாம் என்று ஒரு போராட்டம்! நர்ஸ் உத்தியோகத்துக்குப் போட்டி. 'ஆண் நர்ஸ்கள் பெண்களுக்குச் சிசுருஷை செய்வதா?' என்று எதிர்ப்புக் கிளம்பியது. நீதிமன்றப் படி ஏறியதில் ஆண் இனம் வென்றது!" என்ருள் சுந்தர்.

"என்னமோ அம்மா, காலம் தலைகீழாக மாறிக் கொண்டு வருகிறது. நமக்கு ஒன்றும் புரியவில்லை!" என்ருள் அகிலாண்டம்மாள்.

"விவாகரத்து ஏற்பட்டால் மனைவிக்குக் கணவன் ஜீவனாம்சம் தரவேண்டும் என்று சட்டம் இருந்தது. இப்போது கணவனுக்கு மனைவி ஜீவனாம்சம் தரவேண்டிய சந்தர்ப்பங்கள் இருக்கலாம் என்று நீதிமன்றம் ஒப்புக் கொண்டு பல தீர்ப்புக்களை வழங்கியிருக்கிறது!" என்ருள் ஹேமா.




"இதெல்லாமாவது தேவலாம். 'ஆண்களுக்குத் தேவைப்படும் முக்கியமான உரிமை அழுவதற்குத்தான்' என்று ஒரு மனோ தத்துவ நிபுணர் கூறியிருக்கிருர். 'ஆண்கள் அழக் கூடாது. உணர்ச்சிகளை அடக்கி ஆளத் தெரிய வேண்டும் என்ற கருத்து அபத்தம். ஆண் குலமே! நாலுபேர் காண அழு! அஞ்சாமல் வெட்கப்படாமல் அழு!' என்கிருர்!" என்ருள் சாரு.

"இதெல்லாம் அமெரிக்காவிலே நடப்பது. நம்ம நாட்டிலே என்னடாவென்ருல், பெண்

இனத்துக்குக் கடவுளே பார்த்துக் கொடுத்த ஓர் அடிப்படை உரிமைக்காகப் பெண்களே போராடி இயக்கம் நடத்த வேண்டியிருக்கு!'' என்றார் சங்கரன்.

''அது என்ன சமாசாரம்?''

''பீஹார் பெண்கள் அதற்குப் பெரிய இயக்கமே நடத்துகிறார்கள்!'' என்றார் சங்கரன்.

''என்ன சொல்றேள், புரியும்படியாகத் தான் சொல்லுங்களேன்!'' என்றாள் அகிலாண்டம்மாள்.

''குழந்தைகளுக்குப் புட்டிப் பால் கொடுக்கக் கூடாது; தாய்ப்பால்தான் கொடுக்க வேண்டும் என்று பீகாரில் மாதர்கள் ஓர் இயக்கம் நடத்தி வருகிறார்கள். அதைச் சொல்கிறார்'' என்றாள் ஹேமா.

''வர வர 'அண்ணன் என்பவன் தம்பிக்கு மூத்தவன்' என்றுகூட இயக்கம் நடத்துவார்கள் போலிருக்கிறது!'' என்றாள் அன்னபூரணியம்மாள்.

''இது எதற்கும் இயக்கம் நடத்துகிற யுகம்!'' என்றான் சுந்தர்.

---




இருபத்திரண்டு ரூபாய் கொடுத்து ஒரு தலையணைப் புத்தகத்தை வாங்கிப் படித்துப் பாருங்கள் என்று கூற வேண்டுமென்றால் நூலாசிரியர் அதற்குத் தகுதி உடையவராயிருக்க வேண்டும்! எழுபத்தாறு வயதான கோவை அய்யாமுத்து அரசியலில் அரை நூற்றாண்டுக்கு மேல் ஈடுபட்டிருந்தும் இன்றைக்கும் எளிய வாழ்க்கை நடத்தும் ஓர் அபூர்வப் பிறவி. எதையும் தமக்கெனச் சேர்த்து வைத்துக் கொள்ள விரும்பாதவர். 'தாமிரபத்திர'த்துக்குக் கௌரவம் அளித்தவர்களுள் ஒருவர். அவர் கடந்து வந்துள்ள கரடுமுரடான பாதையைத் திரும்பிப் பார்த்து இந்தச் சுய சரிதையை எழுதியுள்ளார்.

ஸ்பென்சர் கம்பெனியிலே பணியாற்றத் தொடங்குமுன் பலசரக்குக் கடையில் பள்ளி மாணவனாக இருந்த போதே வியாபாரம் செய்து அனுபவம் பெற்றவர், அய்யாமுத்து. முதல் உலகப் போரில் பங்கு பற்றி பக்தாத் முதலிய ஊர்களைச் சுற்றிப் பார்த்தவர். ரங்கூனில் ஓராண்டு காலம் ஒரு கம்பெனியில் பணியாற்றியுள்ளார். கதர் விற்பனை, உற்பத்தியில் நீண்ட நெடுங்கால அனுபவம் பெற்று, பல்லாண்டுகள் நஷ்டத்தில் நடைபெற்று வந்த காதி விற்பனை இலாபகரமாக இயங்க வழி வகுத்தவர். கதர் இயக்கம் இவரது மூச்சுக் காற்றாக இருந்து வந்துள்ளதை இந்நூலின் பல்வேறு அத்தியாயங்களிலிருந்து அறிகிறோம். காந்தி அடிகளுடன் நெருங்கிப் பழகியவர். ராஜாஜியின் அன்பைக் கவர்ந்தவர். நீண்ட காலம் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து தேச விடுதலைக்காகத் தமது மனைவியுடன் பல முறைகள் சிறை சென்றவர். தமக்குச் சரி என்று தோன்றியதைப் பிறருக்காக மாற்றிக் கொள்ளும் வழக்கமில்லாதவர் என்பதைப் பெரியாரின் பாதையிலிருந்து இவர் விலகியதன் மூலம் அறிகிறோம். காந்திஜி, ராஜாஜி ஆகிய பெரியோர்களிடம் தமது கருத்தை வலியுறுத்தி வாதாடிய பிடிவாதக்காரர் என்றும் அறிகிறோம்.

அமரர் ராஜாஜியிடம் இவருக்குள்ள இணையற்ற மதிப்பின் காரணமாக, சுதந்திரக் கட்சி தோன்றியதும் அதில் தாம் சேர்ந்து பணியாற்றியதை விரிவாகக் கூறுகிறார். தமக்குப் பிடித்தமான பெருமக்கள் தவிர, பிடிக்காதவர்களையும் இவர் விட்டு வைக்கவில்லை. மதுவிலக்கில் இவருக்குள்ள ஆழ்ந்த நம்பிக்கையைப் படம் பிடித்துக் காட்டும் சில நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்கன. நஞ்சப்பன் திருந்தியதும், கள்ளுக்கடை ஏலத்துக்கு யாரும் போகவொட்டாமல் தடுக்க அய்யாமுத்து எடுத்துக் கொண்ட பிரயாசையும் நெஞ்சில் நிலைப்பவை.

இவ்வரிய நூலில் சில குறைகளும் இல்லாமலில்லை. ஆசிரியர் கலந்து கொண்ட சில மகாநாடுகளைப் பற்றிய குறிப்புக்களை (பக்கம் 616, 617) படிக்குங்கால் ஏதோ டயரியில் குறிக்கப் பெற்றுள்ள நிகழ்ச்சிகளைப் படிப்பது போல் 'சப்'பென்று இருக்கிறது. 'சென்னையில் சோமாறிகள் என்றொரு வர்க்கம் உண்டு' எனக் கூறிவிட்டு (பக். 820) அடுத்த பாராவில் அந்த வர்க்கத்தினர் எப்படிப் பேசுவார்கள் என்பதையும் குறிப்பிட்டுள்ளார். இது இந்நூலுக்குத் திருஷ்டிப் பரிகாரம். பக்கம். 361ல் உள்ளது போன்ற சில வாக்கியங்களை இன்னும் சற்று நாசூக்காக மாற்றி அமைத்திருக்கலாம். நூல் முழுவதும் நல்ல தமிழ் நடை மணம் கமழ்கிற பொழுது இது போன்ற வாக்கியங்கள் இடம் பெறுவது ஏன்?

'நான் கோயிலுக்குள் சாமி கும்பிடச் செல்வதில்லை. எந்தக் கோயிலாயினும் அதன் அழகைப் பார்க்கத்தான் போவேன்' என்று (பக். 464) கூறியுள்ளார் திரு அய்யாமுத்து. அவர் எதற்காகக் கோயிலுக்குப் போகிறார் என்பது அவரது சொந்த விருப்பத்தைப் பொறுத்தது. அதை யாரும் விமர்சிப்பதற்கில்லை. ஆனால் இதற்கு முரணான கருத்துக்களை இதே நூலில் வேறு இடங்களில் காண்கிறோம்.

இவை போன்ற சில்லறைக் குறைபாடுகள் சில இருப்பினும், இதனை ஒரு நல்ல சுய சரிதம் என்றே கூறலாம். திரு அய்யாமுத்து அரசியலில் பழுத்த அனுபவம் பெற்றவராயினும் தம்மை ஒரு தொண்டர் என்று கூறிக் கொள்ளும் அடக்கமும் பண்பும் பொருந்தியவர். நல்ல எழுத்தாளர், பத்திரிகாசிரியர், கவிஞர், நாடகாசிரியர், திரைப்படக் கதாசிரியர், வியாபாரி, தியாகி, நாட்டுக்கு உழைத்தவர். இவருடைய '**எனது நினைவுகள்**' பயனளிக்கவல்ல நல்ல நூல்.

— ரா. பா.

கிடைக்குமிடம் : வானதி பதிப்பகம், சென்னை — 17.

## சென்னை ஆஸ்திக ஸமாஜத்தில்

# அதிருத்ர வேள்வி

நாட்டு நலனுக்காக அதிருத்ரம் ஜுலை 21ந் தேதியிலிருந்து ஜுலை 31ந் தேதி வரை நடைபெறுகிறது. சண்டி ஹோமம் ஆகஸ்டு 1ந் தேதி நடக்கவிருக்கிறது. நூறு ரூபாய் நன்கொடை அனுப்புபவர்களுக்கு வெள்ளி டாலரும் பிரசாதமும், இருபத்தைந்து ரூபாய் அனுப்புபவர்களுக்கு வெள்ளித் தாயத்தும் பிரசாதமும் அனுப்பி வைக்கப்படும். ஆஸ்திக அன்பர்கள் இந்த வேள்விக் கைங்கர்யத்தில் பணமோ, பொருளோ கொடுத்துப் பங்குபெற வேண்டுகிறோம். அனுப்ப வேண்டிய விலாசம்: **திரு எம். நீலகண்டன், பொருளாளர், அதிருத்ர மகாயக்ஞக் கமிட்டி, 3, வீனஸ் காலனி, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-18**

---

## கலாசாரத் துறைகளில் ஈடுபட்டிருக்கும்

# இளம் கலைஞர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் 1974-75

பல்வேறு கலாசாரத் துறைகளில் இந்தியாவிலேயே உயர் பயிற்சி பெறுவதற்காக, 50 உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படுகின்றன. இவற்றுக்கான விண்ணப்பங்கள் தகுதியுள்ள இளம் கலைஞர்களிடமிருந்து கோரப்படுகின்றன. தேர்ந்தெடுக்கப்பட்ட விண்ணப்பதாரர்கள் ஜுலை 1975-லிருந்து தங்களுடைய பயிற்சியைத் துவக்குவார்கள் என எதிர்பார்க்கப்படுகிறது.

**துறைகள் - பிரிவுகள் :** (1) சாஸ்த்ரீய ஹிந்துஸ்தானி, கர்நாடக சங்கீதம், வாத்தியம் வாய்ப்பாட்டு; (2) மேற்கத்திய இசை; (3) சாஸ்த்ரீய இந்திய நடனங்கள் (4) நாடகம்; (5) கூடியாட்டம், யக்ஷகானம் போன்ற மரபு சார்ந்த நாடகத் துறைகள்; (6) நுண் கலைகள் (ஓவியம், சிற்பம்) (7) பயன்துறைக் கலைகள் (புத்தகங்களுக்குப் படம் வரைதல், வடிவமைப்பு).

**உபகாரச் சம்பளத்தின் மதிப்பு, கிடைக்கும் காலம் :** மாதம் 250 ரூபாய்; சாதாரணமாக 2 ஆண்டுகளுக்குக் கிடைக்கும்.

**வயது :** 1974 ஜுலை 1-ம் தேதி யன்று 18லிருந்து 28 வயதிற்குள் இருக்க வேண்டும்.

**விண்ணப்பங்கள் கிடைப்பதற்கான கடைசி தேதி :** ஆகஸ்ட் 31, 1974. விண்ணப்பப் பாரங்களையும் இதர விவரங்களையும் பெற, உங்களுடைய முகவரியுடன் கூடிய ஸ்டாம்பு இல்லாத (23 செ. மீ. × 10 செ. மீ.) உறையை உடன் அனுப்பி, கீழே கொடுக்கப்பட்டுள்ள விலாசத்திற்கு எழுதவும் :

**கலாசாரப் பிரிவு, இந்திய அரசு**
**ஸி 1 (I) செக்ஷன், அறை எண் 333, 'ஸி' விங்**
**சாஸ்திரி பவன், புது தில்லி - 110001**

74/144

---




ஒருவரை யொருவர் சந்திக்கும்போது பெரும்பாலும் முதலில் குசலம் விசாரிப்பது அவரவர் ஆரோக்கியம் பற்றியே. "சௌக்கியம்தான்" என்னும்போது என்ன மன நிறைவு! "சுகமில்லை" என்னும்போது எவ்வளவு கவலை!

எந்தப் பெரிய நோயும் ஏதாவது ஒரு சிறு அடையாளத்துடன்தான் தொடங்குகிறது. ஒரு சின்னக் கொப்புளம் கவனிப்புக் குறைவால் ரத்தக் கட்டியாகலாம். ரண சிகிச்சை தேவைப்படலாம். ஒரு ரணக் கட்டி புரையோடிப் புற்றுநோயாகலாம். எது சிறிய இடர், எது பெரிய இடர் என்பது முதலில் தெரியாது. எதுவுமே ஆரம்பத்தில் நன்கு கவனிக்கப்படாவிட்டால் விபரீத விளைவுகள் நேர வாய்ப்புண்டு.

## ☐ பூரண வைத்தியப் பரிசோதனை என்றால் என்ன ?

ஆரோக்கியப் பழக்கங்களுள் ஒன்று 'பூரண வைத்திய பரிசோதனை' செய்து கொள்வது. கல்லூரிப் படிப்புக்கும் வேலையில் சேரவும் வெளிநாட்டுப் பயணத்துக்குமே பலரும் வைத்தியப் பரிசோதனை அத்தாட்சி பெறுகின்றனர். தேவையான அனுமதி தரும் அதிகாரிகளைத் திருப்தி செய்ய மட்டுமே இந்த 'அத்தாட்சிகள்' பயன்படலாம். சொந்த ஆரோக்கியத்துக்கு என்றே வைத்தியப் பரிசோதனை செய்து கொள்வது பிறரைத் திருப்தி செய்ய அல்ல. நமது ஆரோக்கியம் நெறிபிசகாமல் போய்க் கொண்டிருக்கிறதா என்று அறியவே; அப்படி ஏதேனும் சிறு தவறுகள் இருந்தால், செப்பனிட்டுக் கொள்ளவே.

முன்னேற்றமடைந்த நாடுகளில் பலரும் வைத்தியப் பரிசோதனைச் செலவைப் பெரிதாகக் கருதாமல் ஓரிரு ஆண்டுக்கு ஒருமுறை பூரண வைத்தியப் பரிசோதனை செய்து கொள்கிறார்கள். பல பெரும் நிறுவனங்கள் நிர்வாகப் பொறுப்பிலேயே அதிகாரிகளுக்கு இந்தப் பரிசோதனையை நடத்துகின்றன. ஆரோக்கியம் குறைந்தால் ஆற்றல் பாதிக்கப்படும் என்பது நிர்வாகத்துக்குத் தெரியும்!

டாக்டரின் நேரிடையான பரிசோதனை தவிர, சோதனைச் சாலையில் நடக்கும் பரிசோதனைகளும் சேர்ந்ததே பூரண பரிசோதனையாகும்.

## ☐ என்ன நன்மை ?

ஒருவருடைய உடலின் எல்லா உறுப்புக்களின் இயல்பும் அவற்றின் இயக்கத் திறனும் பதிவாகி விட்டால் அவருக்கு எந்த இடர் வந்தாலும் உடனே ஏற்ற சிகிச்சையை விரைவாகவும் எளிதாகவும் தொடங்கலாம்.

குறிப்பிட்ட ஒரே நோய்க்குச் சிகிச்சை முறை மனிதருக்கு மனிதர் உடல் இயல்புக்கு ஏற்றபடி வேறுபடும். அதற்கும் இந்தப் பூரண

**ஆரோக்கியம் அழைக்கிறது**

ஆரோக்கியப் பரிசோதனைப் பதிவு பயன்படும். இந்த வைத்தியப் பரிசோதனை நடக்கும்போதே ஏதேனும் இடர் இன்னும் சில காலத்தில் நேர வாய்ப்பிருந்தால் புலனாகும். வருமுன் காக்கலாம். நோய்க்கான அறிகுறி இருந்து இத்தனை நாள் அது வெளியே புலப்படாமல் இருந்திருக்கலாம். இந்த வைத்திய சோதனை காரணமாக அது தெரிய வரும். நோய் முற்றுமுன்பே சிகிச்சை செய்து கொண்டு குணமடையலாம்.

உடல் இயக்கங்கள் பலவும் பற்பல உறுப்புக்களுடன் தொடர்புடையவை. ஆதலால் ஒன்றின் குறை தீர்ந்தால் மற்றொன்றிலும் குணம் தெரியும். உதாரணமாகத் தொண்டையிலே பாக்டீரியா சேர்ந்தால் சிறுநீரகத்தைப் பாதிக்கக்கூடும். சொத்தைப் பல் ஒன்று வயிற்று வியாதிக்குக் காரணமாகலாம். நாட்கணக்கில் வயிற்றுக்கு மட்டும் மருந்து சாப்பிட்டுப் பலனில்லை அல்லவா?

## ☐ என்ன செய்வார்கள் ?

சாதாரணமாக வைத்தியர் ஒரு நோயாளியைக் கண்ணால் பார்ப்பதும் அவருடன் பேச்சுக் கொடுப்பதும் கூட ஒருவகைப் பரிசோதனைதான். இதிலிருந்து தொடங்குகிறது இந்தப் பரிசோதனைத் தொடர். கைகால் அசைவு சீராக இருக்கிறதா, வாயும்

**மனித கோபுரமா எழுப்பியிருக்கிறார்கள் இந்தச் சிறுவர்கள்? இல்லை, ஆரோக்கிய கோபுரமே உயர்ந்திருக்கிறது என்று கூறத் தோன்றுகிறதல்லவா? ஆரோக்கியத்துக்கு அடிப்படையான பூரண மருத்துவப் பரிசோதனையை விளக்குகிறது கட்டுரை.**






பல்லும் ஆரோக்கியமாக உள்ளனவா, காதில் சீழ் வரவில்லையே, உடலில் மேலே புண் ஒன்றும் இல்லையே, கால் கை விரல்களில் வியாதிக்கு அறிகுறியான வீக்கம் ஒன்றும் இல்லையே என்பன போன்ற பார்த்தவுடனே புலனாகும் சோதனை விவரங்களைக் குறித்துக் கொள்வார்கள். பேசும் இயல்பிலிருந்து மன நிலையையும் ஓரளவு கணித்துக் கொள்வார்கள். இதயத் துடிப்பு, நாடி, மூச்சு இழுத்து விடும் திறன், மார்பு விரியும் அளவு ஆகியவற்றையும் சோதித்துக் குறிப்பார்கள். இவற்றில் ஏதேனும் கருதி பேதம் இருந்தால் தேர்ந்த வைத்தியர்களுக்கு அது தெரியும். விரலால் வயிற்றைத் தட்டிப் பார்ப்பதும் ஒரு பரிசோதனை. வீக்கமும் வலியும் தெரிந்தால் அவை நோய் அடையாளங்கள். உடலின் முக்கிய பாதுகாப்பு உறுப்பான ஈரலின் ஆரோக்கிய நிலை சீராக இருப்பது அவசியம். உயரமும் எடையும் வயதுக்கு ஏற்றபடி இருக்கிறதா என்பதும் குறிக்கப்படும். வயதுக்கு ஏற்ப வளர்ச்சி இல்லாவிட்டால் கவனிக்கலாமல்லவா?

### ❑ பரிசோதனைச்சாலை பரிசோதனைகள்

சிறுநீர்ச் சோதனை ஒரு முக்கிய பரிசீலனை. அதில் நீரும் உப்பும் உள்ள நிலை அறிந்து சிறுநீரகத்தின் ஆரோக்கிய நிலையைக் கணிக்கலாம். சிறுநீரில் சீழோ ரத்தமோ கண்டால் விபரீதம். உடனே சிகிச்சை தொடங்கும். சிறுநீரில் சர்க்கரை அம்சம் மிகையானால் டையபெடிஸ்.

ரத்தப் பரிசோதனை மற்றொரு சோதனை. ரத்தம் என்று மொத்தமாக நாம் கருதும் திரவம் சோதனைச் சாலையில் பல தனிப் பொருள்களாகப் பகுக்கப்படுகிறது. அவற்றின் விகிதமும் தன்மையும் ஆராய்ந்து ஆரோக்கிய நிலை அறியப்படுகிறது.

மலப் பரிசோதனையும் இங்ஙனமே வயிற்றிலுள்ள பூச்சிகள், நோய்க் கிருமிகள், ஜீரணத் தன்மை, வயிற்று உறுப்புக்களின் நிலை ஆகியவற்றை உணர்த்துகிறது.

### ❑ வேறு என்ன சோதனை?

மார்பையும் வயிற்றையும் 'எக்ஸ்ரே' படம் எடுப்பது ஒரு முக்கிய சோதனை. நுரையீரலின் ஆரோக்கிய நிலையும், வயிற்று உறுப்புக்களின் நிலையும் இதனால் புலப்படும். சில சமயம் வலியும் இல்லாமல் வீக்கமும் தெரியாமல் ஏதேனும் உள் உறுப்பு பாதிக்கப்பட்டிருந்தால் எக்ஸ்ரே படத்தில்தான் அது புலப்படும். சைனஸ் என்னும் கபால எலும்புக் குகை அமைப்பு பற்றி அறியவும் எக்ஸ்ரே உதவுகிறது.

உடல் ஆரோக்கிய நிலையை உணர்த்தும் மற்றொரு நவீனக் கருவி, 'ஈ.ஸி.ஜி.' என்னும் எலெக்ட்ரோ கார்டியோகிராம். இதய இயக்கத்தையும் ரத்த ஓட்டத்தையும் வரைபடமாக்கும். துடிப்பில் ஏதேனும் ஒழுங்கீனம் இருப்பின் அதனைப் புலப்படுத்தும். நாற்பது வயதுக்கு மேற்பட்டவர் இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை இந்தச் சோதனை செய்து கொள்ளலாம். செய்யும் தொழிலுக்கு ஏற்ப இதயமும் ரத்த ஓட்டமும் பாதிக்கப்படும். ரத்த ஆரோக்கியம்தான் உடலின் மொத்த ஆரோக்கியத்துக்கு ஆதாரம்.

ரத்தத்தைப் பற்றி ஆராயும்போது ஒரு கவனக் குறிப்பு: இதயம் ஆரோக்கியமாக இருப்பது வேறு. இதயத்துக்குப் போய் வரும் ரத்தக் குழாய்களின் ஆரோக்கியம் வேறு. ரத்தப் போக்குவரத்தின் ஒழுங்கில் தடை என்றால் உடல் உறுப்புக்களுக்கு போஷாக்குச் செல்வதில் தடை; அதனால் வேறு இடர்கள் என்று பெருகும். ரத்தக் குழாய்களின் முக்கியத்துவம் உணரப்பட்டு அவற்றின் குறைகளால் நேரும் வியாதிகளின் தீவிரம் பற்றிச் சென்ற இருபது ஆண்டு காலத்தில் நுட்பமான ஆராய்ச்சிகள் உலகெங்கும் நடைபெற்றுள்ளன. இதன் முக்கியம் கருதிச் சென்னை அரசாங்க மருத்துவ மனையில் இந்தியாவிலேயே முதல் முறையாக 'வாஸ்குலர்' பிரிவு (ரத்தக் குழாய் நோய்ப் பிரிவு) தொடங்கியிருக்கிறார்கள். ரத்தக் குழாய்த் தொந்தரவே பலவகை மயக்கங்களுக்கும் சில உறுப்புக்களின் இயக்க இடலாமைக்கும் காரணம் என்று அறியப்படுகிறது. நோயுற்ற ரத்தக் குழாய் உட்புறம் தடிப்பதால் ரத்த ஓட்டப் பாதை சிறுத்துக் குறுகி, ஓட்டம் தடைப்பட்டுப் போவதுண்டு. இதனால் உறுப்புக்களின் இயல்பான இயக்கம் பாதிக்கப்படுவதுண்டு. சீரான பரிசோதனையால் நோயின் மூல காரணம் அறிந்து இடர் களையவேண்டும்.

### ❑ எல்லாருக்கும் சாத்தியமா?

மேற்கூறிய எல்லாச் சோதனைகளையும் சென்னையில் ஒரு தனியார் மருத்துவ மனையில் செய்வதானால் சுமார் நூற்றிருபது ரூபாய் ஆகும். பம்பாய் போன்ற நகரங்களில் இன்னும் அதிகமாகும். மேல் நாடுகளிலோ இதுபோல் பல மடங்கு செலவாகும்.

பெரிய ஆலை இயந்திரங்கள் முதல் வீட்டு சைக்கிள் வரை எத்தனையோ கருவிகளை ஆண்டுதோறும் 'ஓவர்-ஆல்' செய்கிறோம். பழுது பார்க்கிறோம். வாழும் நாள் எல்லாம் உழைக்கும் உடல் என்னும் கருவியையும் கருத்தாகப் பார்த்துக் கொள்ள அவ்வப்போது பரிசோதனை செய்தல் நல்லதுதானே? எல்லாராலும் முடியாவிட்டாலும் முடிந்தவர்களாவது செய்து கொள்ளலாம். நல்ல பழக்கம். இளைஞர்கள் திருமணச் செலவோடு செலவாக ஆரோக்கியப் பரிசோதனை செய்து கொள்வது ஒரு கல்யாணப் பரிசாகும்.

ஆலோசனை: டாக்டர் H. T. வீரா ரெட்டி.
கட்டுரை: தம்பி சீனிவாசன்.

# ரோஷக்காரி

போஸ்ட்மேன் எஸ். வி. சுப்பையா, போர்ட்டர் முத்துராமன், பால்காரி மனோரமா ஆகியவர்களுடன் ரோஷக்காரி விஜயாவும் சேர்ந்து இப்படத்துக்கு நிறைவைத் தருகிறார். பால்காரியின் மனம் பால் போன்றது—சமயத்தில் அள்ளிக் கொடுப்பதில் நம்ப முடியாத அளவுக்குப் பரோபகாரி. மனோரமா மிகவும் நன்றாய் நடித்திருக்கிறார். எஸ். வி. சுப்பையாவின் நடிப்பு மிகவும் இயல்பாக இருக்கிறது.

கே. ஆர். விஜயா பணக்காரியாகத் தோன்றி ஏழையைக் காதலித்தது சரி; பணம் வந்ததும் கணவன் மாறிவிட்டதைக் கண்டு அவனுடன் இருந்து திருத்த முயலாமல், மாமனார், மைத்துனர், மைத்துனி ஆகியவர்களுடன் கணவனைவிட்டு வெளியேறிய ரோஷத்தைப் பாராட்ட முடியவில்லையே! சிறந்த நடிகையான கே. ஆர். விஜயாவையே பாத்திரப் படைப்பு சறுக்கி விழச் செய்து விட்டது. யானைக்கும் அடி சறுக்கும் அல்லவா!



இது முத்துராமன் சகாப்தம். இப்பொழுது அவர் நடித்து வெளி வரும் படங்களிலெல்லாம் அவர் நடிப்பு சிறிதும் சோடை போவதில்லை. ரவிச்சந்திரன் பாத்ரூமிலிருந்து டவலுடன் வெளி வந்ததிலிருந்து, இடையில் பணத் திமிறில் ஆடி, கடைசியில் அடங்கிய வரையில் நன்றாய் நடித்திருக்கிறார். போர்ட்டரின் தங்கை கார் டிரைவரைக் காதலித்து, மணமாகுமுன்பே தாயாகும் அவல நிலை—ஒரு வேளை 'நியூ வேவ்' என்று நினைத்துக் கொண்டுதானோ என்னவோ!—பழசையே திரும்பத் திரும்பப் புகுத்துகிறார்கள்.

வி. எஸ். ராகவன், ரோஷக்காரியின் தந்தை. பணக்காரர்களுக்கே உரிய மிடுக்கோடு நன்றாய் நடித்திருக்கிறார்.

பிலஹரியின் கதைக்குத் திரைக் கதை, வசனம் எழுதிய மதுரை திருமாறனே படத்தை டைரக்ட் செய்திருக்கிறார்.

முதல் காட்சியில், "இரண்டெழு" என்ற பெரியாழ்வார் பாசுரத்தை பூபாள ராகத்தில் மகாராஜபுரம் சந்தானம் பக்திச் சுவை ததும்ப அற்புதமாகப் பாடியிருக்கிறார். பெரியாழ்வாருக்கு நாம் பக்தி பூர்வமான அஞ்சலி செலுத்தியாக வேண்டும், மற்றப் பாடல்களை மறக்கும்படி செய்து விட்டாரே: அதற்காக!

"ரோஷக்காரி"யின் ரோஷம் நம்மைப் பாதிக்கவில்லை!

—கார்ந்தன்





# தேன் நிலவுப் பரிசுகள்

விம்பிள்டன் ஓர் இளம் காதல் ஜோடிக்கு சாம்பியன் கோப்பையும் தட்டும் தேன் நிலவுப் பரிசுகளாக வழங்கியிருக்கிறது. இருபத்தொரு வயது அமெரிக்க இளைஞர் ஜிம்மி கோனர்ஸ் ஆஸ்திரேலியச் சாம்பியன் ரோஸ்வாலை ஜயித்தார். பத்தொன்பது வயது அமெரிக்க இளநங்கை கிரைஸ் எவர்ட் ரஷ்ய ஆட்டக்காரி ஓல்கா மோரஸோவாவைத் தோல்வியடையச் செய்தார். வெற்றி பெற்ற இருவரும் காதலர்கள். இளம் காதல் ஜோடியின் திருமணத்தை நவம்பரில் மணமகள் இல்லத்தில் நடத்த உத்தேசித்துள்ளனர், இரு குடும்பத்தினரும்!

ஜிம்மி கோனர்ஸ் எப்பொழுதும் தனிமை நாடும் பேர்வழி. மற்ற ஆட்டக்காரர்களை விட்டு விலகி இருப்பார். அவர்களுடன் சேர்ந்து ஒரே ஹோட்டலில் தங்காமல் தனித்து வேறு ஹோட்டலில் தங்குவார். மற்ற டென்னிஸ் விளையாட்டுக் கலைஞர்களுடன் உணவருந்தமாட்டார்! ஏன் அவர்களோடு சேர்ந்து அமர்ந்திருப்பது கூட அபூர்வம்! இதற்காக டென்னிஸில், இரட்டையர் ஆட்டத்தில் கூடக் கலந்து கொள்ளாமல் ஒதுங்கிவிட்டார்!

இருபத்தொரு வயதான கோனர்ஸ் கடுமையான கத்தோலிக்கர். இடது கை டென்னிஸ் ஆட்டக்காரர்!

இரண்டு வயதாயிருக்கும் போதே கோனர்ஸுக்கு அவர் அன்னையும் பாட்டியும் டென்னிஸ் பந்தை உருட்டி விட்டு ஆட்டத்தில் ருசி ஏற்படுத்தினர்கள். எட்டாம் வயதில் கோனர்ஸ் ஜூனியர் போட்டியில் கலந்து கொண்டான்.

பள்ளிக்கூடத்தில் படிக்கும் போதும் சதா டென்னிஸ் தான் நினைவு.

வகுப்புக்களை 'கட்' பண்ணிய கோனர்ஸ் ஒரு புத்திசாலி பட்டதாரி இளைஞரை வகுப்புப் பாடங்களைத் தயாரித்துத் தரச் சொன்னர். அவற்றோடு நுழைந்த கோனர்ஸைப் பற்றி அவரது ஆசிரியருக்குத் தெரியாதா என்ன? அவனது குள்ளநரி வேலையைப் புரிந்து கொண்ட ஆசிரியர் அவனது சட்டையைப் பிடித்துச் சுருட்டிக் கொண்டு அவனைச் சுவரில் மோதினர். அதோடு அவன் கொண்டு வந்திருந்த பாடங்களை அவனையே விளக்கிக் கூறச் சொன்னர். இதை எதிர்பார்க்காத கோனர்ஸ் திருதிருவென்று விழித்தான்!

அதன் பிறகு 'ரோஷ'முள்ள கோனர்ஸ் முழு நேர டென்னிஸ் ஆட்டக்காரராக மாறத் தீர்மானித்துப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தார்.

1972 விம்பிள்டனின் போது கோனர்ஸ் — கிரைஸ் எவர்ட் காதலைப் பற்றிப் பேச்சு அடிபட்டது. ஆனல் அதற்கு இரு வருஷங்களுக்கு முன்பே மெரியனில் நடைபெற்ற ஒரு டென்னிஸ் பந்தயத்தின்போதுதான் முதன் முதலில் இருவரும் சந்தித்து அளவளாவினர். லண்டனில் இருவரும் எங்கு சென்றாலும் இரட்டையராகச் சென்றனர்!

விம்பிள்டன் ஆரம்பிப்பதற்கு முன்பே மே மாதத்தில் இந்த டென்னிஸ் ஜோடிக்கு மணம் முடித்து வைத்துவிட எவர்ட் குடும்பத்தினர் முடிவு செய்தனர். விம்பிள்டன் முடிந்த பிறகு வைத்துக் கொள்ளலாம் என்பது கோனர்ஸ் அன்னையின் கோரிக்கை.

''ஜிம்மி எங்கிருக்கிருரோ அங்கிருக்க நான் விரும்புகிறேன்!'' என்கிருள் விம்பிள்டன் வெற்றி வீராங்கனை.

''நான் தனியாகப் பயணம் செய்து நீண்ட காலத்தைத் தனிமையில் கழித்து விட்டேன். இனி என் பயணங்கள் கிரைஸ் எவர்ட்டுடன் இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன், என்னேடு மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ள'' என்கிருர் விம்பிள்டன் சாம்பியன் கோனர்ஸ்.

இந்த ஜோடியின் திருமணத்தை அமெரிக்கா என்ன, உலகமே ஆவலுடன் எதிர்பார்க்கிறது.

— குண்டுமணி

தோட்டக்காரனுக்குப் பூக்களை விரும்பிக் காதலிக்கத் தெரிந்தால் மட்டும் போதாது; அவன் களைச் செடிகளை வெறுக்கவும் கற்க வேண்டும்.

வட்ட மேஜை

# அபத்தம்! அனர்த்தம்!! அசட்டுத்தனம்!!!

கண்டனத்துக்குரிய படம் என்று 'மோகம்' படத்தின் குறைகளைச் சுட்டிக் காட்டியிருந்தீர்கள். அதே போன்று மற்றுமொரு படத்தையும் தங்களின் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

சமீபத்தில் 'நான் அவனில்லை' என்ற படத்தைப் பார்த்தேன். புகழ் பெற்ற டைரக்டரும் திறமைசாலி என்று பெயர் பெற்றவருமான திரு கே. பாலசந்தர் ஆத்திகர்கள் மனம் புண்படும்படி அருவருப்பான காட்சியை' அமைத்திருக்கிறார்.

ஒரு பெண்ணைப் பதினைந்து இருபது பேர் பழனி கோவில் மண்டபத்துத் தூண்களின் மறைவிலிருந்து வெளிவந்து காம வெறியுடன் மடக்குகின்றனர். பின்னர், அவள், தூரத்தில் பாறைகளுக்கிடையே நிலைகுலைந்து கிடக்கிறாள். அவளை மடக்குபவர்கள் விபூதி அணிந்தும் காவியுடுத்தியும் இருப்பதாகக் காட்டியிருப்பது கண்டனத்துக்குரியது.

கற்பழிக்கும் காட்சியில் ''ஆணையிட்டேன் நெருங்காதே, அன்னை மனம் பொறுக்காது'' என்று பாடும் அபத்தக் காட்சியை விட இருவர் விமானமேறுவதைத் தடுக்க ஆடை அவிழ்த்து விடும் அனர்த்தக் காட்சியைவிட அசட்டுத்தனமான கற்பனை 'நான் அவனில்லை' படத்தில் உள்ள மேற்படி காட்சி.

இதே போன்று, இறந்தவர்களிடம் ஹரிஹரதாஸ் ஸ்வாமிகள் பேசுவது போன்ற காட்சியும் கண்டனத்துக்குரியது. மதுரை சுவாமிகள் 'இறந்தவர்கள் வாழும் நிலையும் பேசும் முறையும்' என்ற தலைப்பில் எழுதிய புத்தகத்தில் 'மீடியம்' வாயிலாக மனப்பூர்வமாக உள்ளன்போடு விரும்பினால் முன்னோர்களோடு பேசலாம் என்று சான்றுகளுடன் விளக்கியுள்ளார். இது அவரவரது நம்பிக்கைகளையும் மனப் பக்குவத்தையும் பொறுத்த விஷயம். இதைப் படத்தில் மிகவும் கேலிக்குரிய விதத்தில் அண்ணா, நேரு, காந்தி போன்றோரிடம் பேசுவது போல் காட்டியிருப்பதும் வருந்தத்தக்கது.

சென்னை—34
27—6—74 சோமு நடராஜன்

முப்பது வயதான பிரும்மச்சாரியாகிய நான், பிறந்தது முதலே இருதயக் கோளாறு உடையவன். என் இதயத்தில் சேதமடைந்துள்ள இரண்டு வால்வுகளுக்குப் பதில் செயற்கை வால்வுகளைப் பொருத்தி விட்டால் நான் மிஞ்சியுள்ள வாழ்நாட்களை ஆரோக்கியத்துடன் கழிக்க முடியும். இந்தச் சஸ்திர சிகிச்சையை இந்தியாவில் எங்குமே நான் பெற முடியாது. அமெரிக்காவில் ஆகஸ்டு 11-ந் தேதி ஹூஸ்டன் மெதாடிஸ்ட் மருத்துவ மனையில்தான் சேரலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். பிரபல இருதய நிபுணர் டிபகே தாம் இலவசமாக சஸ்திர சிகிச்சை செய்வதாகவும் மருத்துவ மனைக்குரிய பணமும் செலுத்த வேண்டாமென்றும் பெருந்தன்மையுடன் எழுதியிருக்கிறார். ஆயினும் எனக்கும் துணைக்கு வரும் ஒருவருக்கும் போக வர செலவுகள் ரூ. 40,000—00 தேவைப்படுகிறது.

ஏழைமைச் சூழலில் பிறந்த லோயர் டிவிஷன் கிளார்க்காகப் பணி புரியும் நான் இதற்கு அன்புள்ளம் கொண்டவர்களின் நன்கொடைகளையே நம்பியிருக்கிறேன்.

2—7—47 ஆர். சூரியநாராயணன்
லோயர் டிவிஷன் கிளார்க்,
ஈ. எஸ். ஐ. கார்ப்பொரேஷன், 25, ஸ்டெர்லிங்ரோடு,
சென்னை - 34

குழந்தைகள் உணவு கிடைக்கத் தற்போது படும் துயர் சொல்லவொண்ணாதது. இந்த உணவு பெற 'பிறப்புச் சான்றிதழ்' நகரசபை, பஞ்சாயத்திலிருந்து பெற வேண்டும். சென்னை மாநகராட்சியில் இதைப் பெற முதலில் 50 காசு கொடுத்து மனு வாங்க வேண்டும். அதனில் ஒரு ரூபாய்க்கான 'கோர்ட் ஸ்டாம்ப்' ஒட்ட வேண்டும். பிறகு இரண்டு ரூபாய் 'செலான்' மூலமாகக் கட்ட வேண்டும். இத்தனையும் செலவழித்துப் பத்து நாட்களுக்குப் பிறகுதான் சான்றிதழ் பெறலாம். பத்து நாட்கள் என்பது ஒரு மாதம்கூட ஆகலாம். இந்த நிலையில் 'பிறப்பு முதல் இறப்பு வரை நகரசபை உங்களுக்காகவே உதவுகிறது' என விளம்பரமும் அங்கு காணப்படுகிறது.

இது ஒருபுறமிருக்க, இந்தச் சான்றிதழ் பெற்று ரேஷன் கார்டுடன் இணைத்து, எந்த ஒரு கடையில் சென்று பதிந்துகொள்ள முற்பட்டாலும் ''பதிய முடியாது, சப்ளை கிடையாது'' என்ற பதிலே கிடைக்கிறது. டி. யூ. சி. எஸ்., சிவில் சப்ளை கார்ப்பரேஷனின் ரேஷன் கடை உள்பட அனைவரிடமும் இதே பதில்தான் வருகிறது.

பாரத புண்ணிய பூமியில் குழந்தை பிறக்கும்போதே பஞ்சத்தையும் பற்றாக்குறையையும் சந்திக்க வேண்டுமா? என்ன ஆட்சியோ இது?

சென்னை-49, 17—6—74 அ. ஐ. ரங்கராஜன்

ஊனமுற்றோருக்குத் தமிழ்நாடு அரசாங்கம் செய்து வரும் சேவைகளைப் பாராட்டியதுடன் இம்மாதிரி நிதிக்குச் சர்க்கார் அதிகாரிகளின் மூலம் கட்டாயப்படுத்தி நிதி வசூலிக்காது இருந்தால் நல்லது என்று எழுதியிருந்தீர்கள். எங்களைப்போன்ற பலசரக்கு வியாபாரம் செய்பவர்களை உணவுப் பொருள் சப்ளை செய்யும் ஆபீஸில் உள்ளவர்கள் வந்து ஏதாவது கொடுக்கும்படி கேட்கிறார்கள். இப்படி ஏற்கனவே பல தடவைகள் கொடுத்திருக்க மீண்டும் மீண்டும் வந்து கேட்டால் கொடுக்கும் பணத்தை எந்தக் கணக்கில் எழுத முடியும்? அரசியல்வாதிகள் ஏன் இப்படி அதிகாரிகளைத் தங்கள் வேலையைப் பார்க்க விடாது பிச்சை எடுக்க விடுகிறார்கள்? அவர்களுடைய கௌரவம் இதனால் பாதிக்கப்படுவது தெரியவில்லையா?

தூத்துக்குடி, 23—6—74 பிச்சையா பிள்ளை

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# யூகோ பாங்கில்

# இப்பொழுது உங்கள் ஃபிக்ஸெட் டிபாஸிட் 9% க்கு மேலாக பயனுடைய வட்டி பெறுகிறது

ரெக்கரிங் டிபாஸிட்டுடன்
ஃபிக்ஸெட் டிபாஸிட்டை
இணைப்பது மூலம்!

மற்ற விவரங்களுக்கு
உங்கள் அருகிலுள்ள
யூகோபாங்க் கிளையுடன்
தொடர்பு கொள்ளுங்கள்.

தாங்களே
தங்களுக்கு
உதவ மக்களுக்கு
லாபகரமாக
உதவுகிறது

**யூனைடெட் கமர்ஷியல் பாங்க்**



UCOC.19 TAM

